உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருமுதுகுன்றம்

# அருள்மிகு பெரியநாயகியம்மை

# பிள்ளைத்தமிழ்

அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச

பண்டார சந்நிதிகள் அருளிச்செய்தது



அருள்மிகு குமாரதேவர் திருமடம்,

திருமுதுகுன்றம்

2016.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமுதுகுன்றம்
# அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்

**திருக்கைலாய பரம்பரைத் திருவண்ணாமலை துறையூர் வீரசைவ ஆதினம் 20ஆவது குருமகா சந்நிதானம் அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள் அருளிச் செய்தது**

திருவண்ணாமலை துறையூர் ஆதினம் 24 ஆவது குருமகாசந்நிதானம் **சீர்வளர்சீர் இரத்தின வேலாயுத சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்** அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளியிடப்பட்டது.

**அருள்மிகு குமாரதேவர் திருமடம்,
திருமுதுகுன்றம்
2016.**

# நூல் குறிப்பு

நூல் : அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்

பதிப்பாசிரியர் : முனைவர் **சு.தங்கத்துரை**
ஆதீனப்புலவர்

நான்காம் பதிப்பு : 14-02-2016

உரிமை மற்றும்
வெளியிட்டோர்: திருவண்ணாமலை துறையூர் ஆதீனம்
அருள்மிகு குமார தேவர் மடம்,
திருமுதுகுன்றம்-606 001. (விருத்தாசலம்).

பொருள் : சமயம் (பிள்ளைத்தமிழ்)

தாள் : 13.7 kg

அளவு : டெம்மி 1 X8

எழுத்து : 10 மற்றும் 12 புள்ளிகள்

பக்கங்கள் : 144

விலை : **ரூபாய்.65/-**

படிகள் : 1000

அச்சிட்டோர் : கிருஷ்ணா மறுதோன்றி அச்சகம்
பண்ணுருட்டி, பேச : 04142 242647.



சீர்வளர்சீர் ஆதி சிவப்பிரகாச சுவாமிகள்



திருவண்ணாமலை துறையூர் ஆதீனத்து 23ஆவது குருமகா சந்நிதானம்

சீர்வளர்சீர் **கல்யாணசுந்தர சிவப்பிரகாச பரமாச்சாரிய**

**சுவாமிகள்**



திருவண்ணாமலை துறையூர் ஆதீனத்து 24ஆவது குருமகா சந்நிதானம்

**சீர்வளர்சீர் இரத்தின வேலாயுத சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்**

## உள்ளடக்கம்

உ

சிவமயம்

அருள்மிகு குமாரதேவ சிவப்பிரகாச குருப்யோ நம:

## திருக்கைலாயப் பரம்பரை மெய்கண்ட சந்தானம்

திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம்

அருள்மிகு ஆதிசிவப்பிரகாச சுவாமிகள் வீரசைவ ஆதீனத்தைச்சார்ந்த

அருள்மிகு குமாரதேவர் திருமடம்

இருபத்து நான்காம் குருமகா சந்நிதானம்

**சீர்வளர்சீர் இரத்தின வேலாயுத சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள் அருளிய**

### ஆசி உரை

ஆண்ட குருவே கண்மணியே யருளே நீ நானொன்றாகப்
பூண்ட வடிவை யென்னுடைய புந்தியதனுள் நின்று உணர்த்தி
ஈண்டப் படியே என்னாவில் இருந்தும் உரைக்க வேண்டும்நீ
நீண்ட மாலுமயன் போற்றும் விமலவிருத்த நாயகியே.

(குமாரதேவர், அத்துவித உண்மை.3)

திருவண்ணாமலை, துறையூர் அருள்மிகு ஆதிசிவப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்தின் இருபதாவது குருமூர்த்தியாக விளங்கி அருளாட்சி செய்தருளிய அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள் சிறந்த சிவானுபூதிச் செல்வர். புலவர் திலகமாக விளங்கிய சுவாமிகள் கவிபாடுவதில் நிகரில்லாதவர். கல்விக்கடல் இருவருடைய அறிவின்திறம் மிக விழுமியது. இவருடைய ஒவ்வொரு கவியும் அழகும் சுவையும் உடையதாய் விளங்கும். சிறந்த உரையாசிரியராகவும் விளங்கியுள்ளார்கள். உலகமக்கள் எளிதில் ஓதி உய்தல் பொருட்டு அருள்மிகு குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய சுத்த சாதகத்திற்கு தெளிவான உரை எழுதி உதவியுள்ளமை யாவரும் நன்கறிந்ததே.

அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள், எழுதியருளிய '**அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்**' '**குமாரதேவர் அபிசேக மாலை,**' '**திரிபதார்த்த உண்மை உபதேச விளக்கம்**' முதலிய அருள் நூற்கள் அவர்களுடைய பெரும் புலமையை நன்கு விளக்கும். அவற்றுள் '**அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்**' தேனினும் இனிய தண்டமிழ்ப் பிரபந்தமாகும்.

உலகன்னையாகிய அருள்மிகு பெரியநாயகியம்மை மூவுலகும் போற்றும் முருகனது பெருமைபகர் திருமுதுகுன்றத்தில் அருள்மிகு குமாரதேவரை, பொற்கிண்ணத்தில் பாலளித்து ஆட்கொண்ட வரலாற்றை அனைவரும் நன்கறிவர்.

மன்னராக இருந்து, துறவரசராக விளங்கிய அருள்மிகு குமாரதேவரை, அருள்மிகு சாந்தலிங்க சுவாமிகள் திருமுதுகுன்றம் வரப்பணித்து, அன்னை பெரிய நாயகியின் அருள்பெறச் செய்யவே என்பது எல்லோரும் அறிந்த வரலாறாகும்.

அனைவரும் உய்ய அருள் வழங்கும் அன்னை பெரிய நாயகி மீது ஆதீனத்தின் இருபதாவது குருமூர்த்திகள் திருவாய் மலர்ந்தருளிய **அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்** பெண்பாற் பிள்ளைத்தமிழ் இலக்கண அமைதியுடன் படித்தாரைப் பிணிக்கும் பான்மையில் திகழ்கின்றது என்பது மிகையன்று. பத்துப் பருவத்துப் பாடல்களும் பத்திச் சுவைகனி சொட்டச்சொட்டப் பாடல் பெற்றுள்ளன. எல்லா பாடல்களும் பாட்டுடைத் தலைவியாகிய பெரியநாயகியம்மையின் பெருமையினை இனிமையுடன் எடுத்து இயம்புகின்றன. இவ்வாசிரியர் சொற்சுவை, பொருட்சுவை, திகழப்பாடியுள்ள இந்நூல் சைவப்

பெருமக்கள் அனைவரின் இல்லத்திலும் உள்ளத்திலும் சேமித்துப் போற்றி வைக்கத் தக்கதாகும்.

பத்திநெறிப் பனுவல்களைப் படைத்து போற்றிக் கண் எனக் காத்து மக்களுக்கு அருள் ஞானத்தை வழங்கிவரும் வீரசைவ ஆதீனத்தின் வெளியீடாகிய இந்நூல், வீரசைவ ஆதீனத்தின் **23ஆம் குருமுதல்வர் சீர்வளர் சீர் கல்யாண சுந்தர சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள் 2வது குருபூசை விழா மலராக** நான்காம் பதிப்பாக மலர்கிறது.

அன்னை பெரியநாயகியின் பேரருளை உணர்த்தும் இப்பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ் நூலைப் பதிப்பிக்க உதவிய எமது ஆதீன புலவர் முனைவர் சு.தங்கத்துரை அவர்களுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் சிவஞானமும் சிந்தித மனோ சித்தியும் தீர்க்காயுளும் பெருகுக.

இந்நூலைப் பத்தியுடன் பயின்று ஓதி அனைவரும் அன்னை பெரியநாயகியின் அருள்பெற்றுக் குரு லிங்க சங்கம பத்தியில் சிறந்தோய்குவார்களாக.

திருமுதுகுன்றம், குருமகா சந்நிதானம்
14-02-2016.

## இரண்டாம் பதிப்பின்

# முன்னுரை

பிள்ளைத்தமிழ் என்பது, தமிழ் மொழியிலுள்ள 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. அது, ஆண்பாற் பிள்ளைக்கவி, பெண்பாற் பிள்ளைக்கவி என இருவகைப்படும். ஆண்பாற் பிள்ளைக்கவி, காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் பத்து உறுப்புகளைவுடையது. ஒவ்வொரு உறுப்பும் பத்துப்பத்து விருத்தப்பாவாள் ஆனதாகும். பெண்பாற் பிள்ளைக்கவி, ஆண்பாற்பிள்ளைக்கவி உறுப்புக்களுள் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் மூன்றினையும் விலக்கி, ஏனைய ஏழு உறுப்புக்களையும் கூட்டி, உறுப்புக்குப் பத்துப்பத்து விருத்தப்பாவால் முடிவதாகும். இப்பெண்பாற் பிள்ளைக்கவியில் கழங்கை விலக்கி, நீராடலைக்கூட்டிப் பத்து உறுப்புக்களாகக் கொள்வதுமுண்டு. அவற்றுள் இந்நூலாசிரியர், கழங்கை விலக்கி நீராடலைக்கூட்டிப் பத்து உறுப்புக்களாகக் கொண்டு பாடியுள்ளார்.

இப்பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழ், மிக்க சொல் நயமும் பொருள் நயமும் செறிந்து விளங்குகின்றன. நூலாசிரியரின் அநுபவ வுண்மைகள் அமைந்து மிளிர்கின்றன. சித்தாந்தவுண்மைகள் சிறந்து பொலிகின்றன. படிக்கப் படிக்கப் பக்திச் சுவை ததும்பி வழிந்து படிப்பவருள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றது.

இத்தகைய சிறந்த நூலை, துறையூர் வீரசைவாதீனம் 21ஆவது பட்டம் ஸ்ரீ சிதம்பர சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள், பூவை திரு.கல்யாணசுந்தர முதலியார் அவர்களைக் கொண்டு பரிசீலனை செய்து முதற்பதிப்பாக விரோதி ஆண்டில் வெளியிட்டுள்

ளார்கள். திடீரென்று ஒரு வாரத்துள் இரண்டாம் பதிப்பாக இந்நூலையே வெளியிட நேர்ந்தது. அதனால், இந்நூலை, தளை, சீர்பிரித்து, பிழைபாடின்றி, உரையும் எழுதி வெளியிட இம்முறையும் இயவில்லை. உலகம் பொறுக்குமாக. வெளிவராத வேறு நூல்களுள் ஒன்றை வெளியிடலாமெனின் அவைகளும் ஏட்டுச்சுவடிகளிலிருப்பதால் விரைவில் சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள், அடியேனிடம் "இரண்டு நூல்களாயினும் இவ்விழாவிற்குள் வெளியிடுங்கள்" என்று பணித்தார்கள். எவ்வளவு முயன்றும் வெளியிட்ட நூலையே வெளியிட நேர்ந்தது பற்றி வருந்துகின்றேன்.

மேற்படி சந்நிதானம் அப்பெருமுயற்சி தளராமல் சுமார் பத்தாண்டாக அச்சிட்டு வெளிவராதிருக்கும் திருவாவடுதுறை 9ஆவது பட்டம் ஸ்ரீ அம்பலவாணதேசிகர் அருளிய "ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் நெஞ்சுவிடு தூது" என்னும் நூலையும், இவ்வாதீனத்தில் நாளிதுவரை வெளிவராது ஏட்டுச் சுவடிகளிலிருந்து இடர்ப்பாடுறும் பல அரியபெரிய நூல்களையும் காலப்பிற்பாடின்றி கூடியவிரைவில் அச்சிட்டு வெளிப்படுத்தித் தமிழ் மொழியையும், சைவ சமயத்தையும் வளர்த்து அழியாப்புகழை நிலைநாட்டுவார்கள் என்று எண்ணுகின்றேன். அவ்வாறே அம்பலக் கூத்தரும் அருள்புரிவாராக.

இப்பெரிய நாயகியம்மை பிள்ளைத்தமிழை இயற்றிய ஆசிரியர், தென்னாற்காடு ஜில்லா சிதம்பரம் தாலுகா தில்லையம் பதியிலுள்ள திருப்பாட்டன் தெருவில் வீரசைவ மரபில் பிறந்த சொக்கலிங்கம் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றவர்கள். இவர்கள், இளமையிலேயே துறவுபூண்டு, திருமுதுகுன்றம் நண்ணி, ஆங்கு ஸ்ரீ குமாரதேவர் பரம்பரையில் வந்த ஸ்ரீ முத்தைய சுவாமிகளிடத்துத் தீக்ஷை பெற்று, அவர்களிடமே தமிழ் மொழியிலுள்ள இலக்கிய இலக்கணங்களைத் தெளிவுறக் கற்றுத் தேர்ந்தனர். தாம் கற்ற கல்விக்கேற்ப நல்லறிவும் நல்லொழுக்கமும்

உடையராய் சிவபக்தியில் சிறந்து விளங்கினார்கள். அதனால் அவர்கள் திருக்கைலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருத்துறையூர் வீரசைவாதீனம் 20ஆவது பட்டம்பெற்று ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதிகளாய் நீண்டநாளிருந்து தமிழ் மொழியையும், சைவ சமயத்தையும் வளர்த்து வந்திருக்கின்றனர்.

அக்காலத்தே தான், இந்த திருமுதுகுன்றம் பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழைப் பாடியிருக்கின்றார். இதுவன்றி குமாரதேவ ரபிடேகமாலை, திரிபதார்த்தவுண்மை, உபதேச விளக்கம் முதலிய நூல்களையும் இயற்றி, குமாரதேவர் செய்துள்ள பதினாறு சாத்திரங்களுள் ஒன்றான சுத்தசாதகம் என்னும் நூலுக்கு உரையெழுதியும் வைத்துள்ளார்கள். இப்பிள்ளைத்தமிழ் பாயிரச் செய்யுளுள் சகாப்தம் ஆயிரத்து எண்ணூற்றுப் பதினொன்றில் இப்பிள்ளைத்தமிழ் இயற்றியது என்று காணப்படுவதால், இந்நூல் கி.பி.1889இல் பாடியதாகும்.

இந்த ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டாரசந்நிதி அவர்கள் ஒருபோது தாம் திருத்துறையூரினின்றும் நீங்கி, தங்கள் மடத்தைச் சார்ந்த சென்னையிலுள்ள மயிலாப்பூர் குமாரதேவர் மடத்தில் எழுந்தருளியிருந்தார்கள். அங்கே சோழவள நாட்டிலுள்ள திரிசிரபுரத்தில் அந்தணர் மரபில் பிறந்து சிதம்பரம் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்ற ஓரிளைஞர் வந்து எதிர்பட்டனர். நம் ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள் அவ்வந்தணச் சிறுவரின் அறிவின் திறனையறிந்தார்கள். அவரைத் திருத்துறையூருக்கு உடனழைத்து வந்தார்கள். அவர்தம் மனங்கோணாதவாறு வைத்திருந்து, கல்வியறியூட்டி, வீரசைவாகம விதிப்படி, சிவலிங்கதாரணமாகிய தீக்ஷைகள் செய்திட்டு, தமக்குப்பின் அவர்களையே திருத்துறையூர் வீரசைவாதீனத்தில் 21ஆவது பண்டார சந்நிதிகளாகப் பட்டம் சூட்டிவைத்து தாம் சிவானுபவ இன்பம் எய்தினார்கள்.

அதுமுதல், ஸ்ரீ சிதம்பர சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள், திருத்துறையூர் பெரிய மடத்திலும், திருமுதுகுன்றம் குமாரதேவர் மடத்திலுமாக இருந்துகொண்டு, தங்கள் ஆதீனத்தைச் சேர்ந்த 64 மடாலயங்களையும் பரிபாலனம் செய்துவந்தார்கள். இவர்கள் பல மடாலயங்களைப் புதுப்பித்துக் கட்டி வைத்தார்கள். பரந்த நிலங்களையும், மிக்க பொருள்களையும் மடாலயத்திற்குத் திரட்டி வைத்தார்கள். தம் வாழ்நாள் இறுதியில், தங்கள் மடாலயத்து அடியவர்களுள் ஒருவராக இருந்த சுப்பிரமணியம் என்னும் இளமைப் பெயரெய்தியவர்கள் நிறைந்த கல்வி, சிறந்த அறிவு, பரந்த நோக்கம், விரிந்த அன்பு, மிகுந்த ஆற்றல், தகுந்த அடக்கம் ஆகிய நற்குணமும் நல்லொழுக்கமும் உடையவர்களாய் இருந்தமை கண்டு அவர்களுக்கே, வீரசைவாகம விதிப்படி தீக்ஷை முதாலயின செய்து, மகாபிஷேகமும் பட்டமும் சூட்டி திருமுதுகுன்றம் குமாரதேவர் மடத்திலேயே சிவானந்த பரிபூரணம் எய்தினார்கள். 14-02-1941இல் அவர்களுக்கு, ஆங்கே, ஸ்ரீ சுப்பிரமணிய பண்டார சந்நிதிகள், சிவானந்த பரிபூரண விழா நடைபெறுங் காலத்து, அவர்களின் நினைவுக்குரியாக விரைவில் இப்பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ் அச்சிட்டு வெளிப்படுத்தி, யாவருக்கும் இலவசமாக வழங்கித் தமிழ்மொழியை வளர்க்கத் தொடங்கியது போற்றத்தக்கதேயாம்.

இவ் அருளே உருவாயெழுந்த ஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள், எவ்வகை நலமும் இனிது எய்தி, நீண்ட ஆயுளுடன் நெடுநாளிருந்து, தமிழ்மொழியையும், தமிழ்ப் புலவர்களையும் சைவ சமயத்தையும் ஆதரித்து வளர்த்து இனிது வாழுமாறு பொன்னம்பலவாணர் இன்னருள் புரிவாராக.

விக்கிரம வருடம்,
14.02.1941.

மேற்படி ஆதின வித்துவான்
ஆ.சுந்தரராஜ உடையார்
திருமுதுகுன்றம்.

உ

சிவமயம்

# திருமுதுகுன்றம் பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழ்

மூன்றாம்பதிப்பின்

## முன்னுரை

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணைப் பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

(விருத்தாசல புராணம்.1)

அத்துவித ஆனந்த நித்யபரிபூரண அகண்ட சின்மய வடிவமாய் அமர் விருத்தாம்பிகையின் திருவடிக்கருணையைப் பேசுவது இப்பிள்ளைத்தமிழ்.

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவண்ணாமலைத் திருத்துறையூர் வீரசைவாதீனத்தின் ஞான குரு பரம்பரையினர்க்கு திருமுதுக்குன்றத்தில் அமர் பெரியநாயகி யம்மையின் திருவருள் விலாசம் ஆதிமுதல் இன்றுவரை மன்னிவிளங்குகிறது. ஆதீன முதற்குருவான ஆதிசிவப்பிரகாசர் தில்லையில் ஆட்கொள்ளப்பட்டு சைவத்தைக் காத்து வீர சைவத்தை விளங்க வைத்தார். சிவபெருமானே தாம் ஆடியது தில்லை, தாம் இருப்பது முதுகுன்றம், முதுகுன்றம் எமது சொரூபம், மணிமுத்தாறு எமது பரை யென்று கூறியதாகப் புராணங்கள் கூறும். முதுகுன்றத்தின் சிறப்பு சைவத் திருமுறைகளிலும், கந்தபுராணத்திலும் காணத்தகும். விருத்தகாசி என வழங்கப்படும் இத்தலத்தில் பல சிவஞானச் செல்வர்கள் ஆளப்பட்டு அருள்பாலித்துள்ளனர். ஆதி சிவப்பிரகாசரால் ஆளப்பட்டுத் தனக்குபின் ஞானதேசிகராய் விளங்கச் செய்த ஞானக்கூத்த சிவப்பிரகாசர் விருத்தாசல புராணம் என்ற பொருள் செறிந்த நூலை அருளினார். பின் ஐந்தாம் குரவராக விளங்கிய

ஸ்ரீ குமாரதேவர் விருத்தாம்பிகையால் ஆளப்பட்டு சுத்தசாதகம் முதலான 16 ஞானசாத்திரங்களை இயற்றி உலகை உய்ய வைத்தார். இந்த சந்தானத்தில் 20ஆம் குரவராக விளங்கியவர் இப்பிள்ளைத்தமிழ் இயற்றிய ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச தேசிகராவார். இப்போது ஆதீனத்தில் வீற்றிருந்து அருளாட்சி புரியும் சுவாமிகள் 23ஆம் சிம்மாசனாதிபதியாவர்.

**நூல் ஆக்கியோன் பெருமை:** ஸ்ரீ சொக்கலிங்க சிப்பிரகாசரின் காலம் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். அவர் ஸ்ரீ குமாரதேவர் இயற்றிய ஒப்பில்லா ஞான நூலாகிய சுத்த சாதகத்துக்கு ஒரு அரிய பெரிய "பாடியம்" என்று சொல்லத்தகும் உரையையருளினார். ஸ்ரீ குமாரதேவரின் அடியொட்டி, அவர் பாடிய ஸ்ரீ பெரியநாயகிம்மை பதிகத்துக்கு விளக்கமாக சாத்திரமும் தோத்திரமும் கூடிய காவிய நல் விளக்கமாக இப்பிள்ளைத்தமிழை பாடியருளினார் (கி.பி.1889ஆம் ஆண்டு பாடியது எனத் தெரிய வருகிறது). துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலாயினோரும் பெரியநாயகியின் பனுவல்கள் பல இனிய செந்தமிழில் அருளியுள்ளார்கள்.

**அம்மையின் திருநாம மகிமை:** அம்பிகைக்குப் பலத் திருநாமங்கள் இருப்பினும் "பெரியநாயகி" என்பது ஒப்பற்றது. நூலாசிரியர் இதை விளக்க "வருகைப் பருவப்" பாட்டில் "பிரம சொரூபியே" என்று போற்றுகிறார். (வடமொழியில் "பிருஹத்" "பிரமம்") அது பர சிவம். அதை விளக்குவது பராசக்தி, சத்தி பேதங்கள் பலவிருப்பினும் எம்பெருமானுக்குப் பிரிய பெரியநாயகி "சராசங்கள் விளங்கி அசைய அசையாத விமலன் தானும் அசைந்திட". உயிர்கட்கு முத்தியளிக்கும் கருணாகரி. எனவே பெரியநாயகி என்ற திருநாமம் விருத்தாம்பிகை, ஜெகதாம்பிகை, பாலாம்பிகை முதலிய திருநாமங்களை விட உயர்ந்த பொருளைத் தருவதாகும். (* அது விமர்சனி, பின்னை)

"பிரமப்" பொருளுக்கு ஒரு சூத்திரம்போல் நூலாசிரியர் பின்வருமாறு விளக்குகிறார். (முத்தப் பருவம் - 1)

"பெருகி வளரெம் பெருமாற்குப்
பிரியப் பெரிய நாயகியைப்
பெண்ணிற் கரசா யண்டமெலாம்
பெற்று வளர்த்துப் பெருகி விண்டு
அருவிப் பொலியும் பெருங்கருணைத் தாயே".

பெரிய பொருள் அருவுருவம் என்பது விளக்கப்படுகிறது. அது சுட்டிக்கூற ஒணாதது ; அறிய ஒணாதது. நூலாசிரியர் தமக்கு இருதாளளித்த பெரியநாயகியின் பெருங்கருணையை இயல் தமிழில் (காப்புச் செய்யுள் - 1 பார்க்க) பாடி மகிழ்கிறார். திருமுறைகளையும், விருத்தாசல புராணத்தையும் ஓதாதார் இத்திருநாம மகிமையை உணரார், இவைகளின் சாரமாக ஸ்ரீ குமாரதேவரின் பெரியநாயகியம்மன் பதிகம் விளங்குகிறது. இப்பிள்ளைத் தமிழொடு அப்பதிகமும் ஓதுதல் நல்லது.

**நூலின் சிறப்பு:** இப்பிள்ளைத் தமிழின் சிறப்புகளை முழுதுங் கூறப்புகின் விரியும். இதில் புராணச் செய்திகள் பல அடங்கியுள்ளது மட்டுமின்றி (உதாரணம் - விபசித்து இருடிக்கு அருள்பாலித்து) உண்மை அடியார்களான திருஞானசம்பந்தர். ஸ்ரீ குமாரதேவர் முதலாயினோர் தவங்களை இது பரக்கப் பேசுகிறது. தன்னையாண்ட ஸ்ரீ குமாரதேவரை ஆசிரியர் "குறைவிலாத தவக்குமரன்", "வள்ளமுது கரங்கொ(ண்)டு சென்று அரசின் சீர்நிழல் வதியுங் குமரற்கு ஊட்டிச் சின்மய ஒளிகாட்டி அருள் பெற்றவர்", அரசடியிற் அதிமதுர பால்வாய் நெரித்தூட்டப் பெற்ற குமரன்", "சக-சம-துறவு (சகஜ நிட்டை) சகசம உறவு, அத்துவித சம்பந்தம் உபதேசித்து அடிமுடி சாற்றி வாய்க்குப் பவள பாலூட்டப் பெற்ற குமரன் " என்று பலவாறு போற்றுகிறார். குமாரதேவர் இயற்றிய சுத்த சாதகம் செம் பொருள்

நிலையிதுவெனும் உபநிடதச் செவ்வழி கோணாமே செந்தா நின்று உரை செய்த சுத்தச் செந்நூல்" என்று அருளடியாரையும் அருளாட்டியையும் நூலாசிரியர் போற்றுகிறார்.

அம்மையைப் பாராட்டுகையில் "நெஞ்சுருகி கசியுற்றவர் கட்கெதிரே நின்றபாவாய்", " மறைச் சிரசிற் பொலி சிற்பத சங்கரி எம்பாவாய்", "கஞ்சுகமஞ்சும் ஒழிந்தவர் கண்டிடு கண்ணே, வெம்பாசக் கடல் முழுகாது வினை மடன்மலர் தாள் நிழல், இந்தா! என்று ஈயும் செஞ்சுக வாய்மொழியாள்", "அண்டமுயிர்த்தவள், மலையரையனிடம் உரை வித்தகி", "எவ்வுயிரும் செய்தவக் குறைவற வரும் மடப்பிடி", "செழிமலரடி நினைபவர், மலீஇருள்வுறு சித்சுடர் தினமணி", " பற்றறும் முத்தர்கள் மீண்டும் கருக்குழி சேராமே தாவுந் தருமக்கொடி, உலகில் தலைசாயாமே தகுமறை தந்திர விதிவழியும் பாழ் உலகில் போகாமே... மெய்த்தவந் தந்திடும் மயில்", " ஒப்பில் தவத்தர் உளக் கோயிலுறை ஞான மணிவிளக்கே" எனப் பன்னிப் பன்னிப் போற்றுகிறார்.

**சாத்திரக் கருத்துக்கள், உபதேசங்கள்:** ஆங்காங்கே பல அரியஞான சாத்திரக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. உதாரணமாக கீழ் தந்துள்ள "முத்துப்பருவப்" பாட்டை உன்னுக.

ஐந்து பொறியும் புலன்வழியில்
ஆமை யுறுப்பைந்து அடக்குதல்போல
அடையா தமக்கு நடுநிலையில்
அடுக்கு நினைப்பு மறப்பதூம் போய்ச்
சிந்தை யொருங்கிச் சமனான
செய்ய தராசி னுனியதுபோற்
செவ்வே யிருந்துந் தனையருளைத்
தேர்ந்து பரையைத் திளைத்துமேல்

எந்தை அடிக்கீழ் இரண்டற நல்ல
இன்பப் பூவை யொடுஞ் சுகித்தங்கு
இறுமாந் திருக்கும் பெருந்தவத்தோர்
போற்றித் துதித்துக் கேட்டவரம்"...,

பெறும் மாண்பை, ஞானயோகத்தின் இரகசியத்தை, ஆசிரியர் நனி விளக்குகிறார். இன்னும் அரிய பல பகுதிகள் உள. மூலத்தைப் படித்து, கொள்க.

**"காப்பிய நயங்கள்"** : இப்பிள்ளைத் தமிழ் ஸ்ரீ குமரகுருபரர் முதலாயினோர் பாடியருளிய பிரபந்தம் போல் பல கவிநலன்கள் உடைத்து. யாப்பு அணி அலங்காரம் முதலிய எல்லா அழகும் பெற்றுள்ளது. சில பாட்டுகள் சந்தப்பாட்டுகளாக அமைந்துள்ளன. (உதாரணம் - தாலப்பருவம் 7). எல்லாப்பாக்களும் அன்புரசம் விம்மும், நலனுடையதாய், இன்னோசையுடையதாய் உள்ளன. "வருகைப்பருவம்" முதல் பாட்டில் ("அம்பொன்மணி மேகலை அடைந்திட,...") அம்பிகையின் பாதாதி கேச வருணனையைப் படித்து மகிழத்தக்கது. தாலப்பருவப் பாட்டுகள் உண்மைத் தாலாட்டுப் பாக்கள் போல் சொல்லினிமையும், இசை இனிமையும் செறிந்துள்ளன. (உதாரணம் - 6,7, பாக்களின் அடிகள் "ஏ" காரத்தில் முடிவதால் "நீலாம்பரி" இராகத்தில் பாடத்தக்கன. (இக்காலத்துத் தாய்மார்கள் தெய்விகத் தாலாட்டை மறந்து தம் குழந்தைகளை வாளா வளர்க்கிறார்கள். அந்தோ, அறியாமை).

**நூற்பயன்:** கீழ்க்கண்ட அழகிய கருத்துகள் இந்நூற்றாண்டுத் தக்கனவாய் உள்ளதை ஓர்ந்து உன்னுக (சப்பாணி - 7).

"பிரமப் புரபொய் கைக்கரை யயில்பால் வாய் வீணாகமே
பெருமா னென்பணி புயமலை பாமலர் பெய்த்து சோராமே
தரமறு பதிதறும் வீட்டடை வித்தது தரையினி வாராமே

தண்டமிழ்நாடு தழைந்தது சைவஞ் சமணிருள் சாராமே
குரவாணி காழிக் குழவியை யருள் பவள் கொட்டுக சப்பாணி."

தொடர்ந்து வரும் இருபாட்டுகளும் சுந்தரர், குருநமச்சிவாயர் முதலியோருடைய அன்பையும், சிவகுமாரர்கள் இருவருடைய செல்வச் சிறப்பையும் பாடுகின்றன. ஆசிரியர்.

"வசைசொல் பழகியஎனை நற்றமிழ் சொலவைத்த
அருட்தாயே, தருணத்துதவும் அருட் கடலே"

என்று பெருமிதத்துடன் கைம்மாறு செலுத்துகிறார். நம்மனோரும் வசைமொழிகள் ஒழித்து, இத்தெய்வப் பனுவல்களைப் பாடிப் பரவுதல் கடனாகும்.

**23ஆம் பட்டத்தின் மாட்சி, இப்பதியின் அமைதி:** இப்பிள்ளைத் தமிழின் இம்மூன்றாம் பதிப்பு 38 ஆண்டுகட்குப் பின் கண்ணிழந்தவர் கண்பெறுமாப்போல் இப்போது 23-ம் பட்டத்தில் வீற்றிருந்து இளவயதில் ஆட்சிபுரியும் ஸ்ரீலஸ்ரீ கல்யாணசுந்தர சிவப்பிரகாச பண்டார சந்நிதிகளின் ஆறாத அன்பினால் வெளியாகிறது. இதற்கு முன்பட்டத்திலிருந்து அருளாட்சி செய்து வரும் அன்பே உருவாகிய எம் குருநாதருமான ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள் சுத்த சாதக நூலை அடியேனால் ஆங்கிலமாக்கி உலகுக்கு அளித்து புகழ் பெற்றார். சென்ற ஆண்டு ஸ்ரீ குமாரதேவர் குருபூசையில் வீரசைவக் கவியரசு ஸ்ரீ கந்தப்ப முனிவர் இயற்றிய : திருத்தணிகைப் பிள்ளைத்தமிழை அடியேனது உரையுடன், 23ஆம் பட்டம் சந்நிதானம் வெளியிட்டுப் பக்தகோடிகளை மகிழ்வித்தது. இவ்வாண்டு குருபூசையில் (சித்தார்த்தி புரட்டாசி பூரம் - 20-09-79) யன்று பொருந்தவே ஸ்ரீ பெரியநாயகிப் பிள்ளைத்தமிழை வெளியிடுகிறது. அதைப் பதிப்பிக்க எளியேனைப் பணிவித்தமைக்கு கைம்மாறு சொல்ல வல்லேனல்லேன். இந்த விதமான நூல் விநியோகம் மேலும் வளர்க எனப் பிரார்த்திக்கிறேன்.

இப்பதிப்பில் பாட்டுகள் பதச்சேதம் செய்து அச்சிடப் பட்டுள்ளன. வாசகர்கள் பாட்டின் பொருளைச் சிரமமின்றி உணர இது உதவும். காகித விலை உயர்வினால் நூலுக்கு உரை எழுத தற்சமயம் தவிர்க்கப்பட்டது. சென்ற பதிப்பின் முன்னுரையில் எழுதப்பட்ட விஷயங்களை மீண்டும் எழுதப்படவும் இல்லை. எனவே வாசகர்கள் மூலத்தைப் பன்முறைப் படித்து பயனடைக.

**நன்றியும் வாழ்த்தும்:** இந்த நூலைப் பதிப்பிக்கப் பாடல்களை பிழையற திருத்தியும், பதச்சேதம் செய்தும் இன்னும் பல வகையில் எனக்கு உறுதுணையாய் நின்ற எனது ஆன்மநேய நண்பர் சித்தாந்தப் புலவர்மணி திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஒ.எல்., அவர்கட்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். அவர் தொடர்பு ஆதீனத்துக்கு மிகுக. அவர் சைவத் தொண்டு நீடு வளர்க.

இந்நூலை குறுகிய காலத்தில் கருத்துடன் அச்சிட்டுத் தந்த எனது நண்பர் திரு. மு.நாராயணசாமி முதலியாருக்கு எனது நன்றி உரித்தாகுக.

இந்நூலைப் பல்லோரும் படித்து உய்யுமாறு ஸ்ரீ பெரிய நாயகியின் இன்னருளைப் பிரார்த்திறேன்.

நமச்சிவாய வாழ்க.

திருமுதுகுன்றம்,
சித்தார்த்தி புரட்டாசி பூரம்,
20 செப்டம்பர் 1979.

அடியவன்,
நல்.முருகேச முதலியார்.

உ

திருசிற்றம்பலம்

மகிழ்வுரை

# அருள்மிகு பெரியநாயகி அம்மன் பிள்ளைத்தமிழ்

மரகதவடிவும் மதித்திருமுகமும்
மலர்குழலும் குருநகையும்
கரகமலமும் கூர்விழியுங் செவ்வாயும்
கச்சணி தனமும் நூல் இடையும்
அரகர என்போர்க்குஅளித்திடும் பதத்தோடு
அஞ்சல் யென்று என்எதிர்தோன்றி
உரகதியளித்த பெரியநாயகியே
உளத்தின்இருத்தி வாழ்த்திடுவாம்
(சுத்தசாதகம்.3)

அருள்மிகு ஸ்ரீ குமாரதேவர் கன்னட தேசத்தில் அவதரித்து வளர்ந்து திருமணமாகி இறைவன் அருளால் அரசபதவி வகித்து வரும் நாளில் நாம்யார் நாம் அடையப் போகும் பயன் என்ன நாம் முக்தியுடையும் வழியாது என்று தன்னைத்தானே சிந்தித்து பந்த பாசத்தை விட்டால் தான்முத்தியடைய முடியும் என்று இறைவன் அருளால் தோன்றியது. அதன் காரணமாக மனைவி, மக்கள், நாடு, நகரம், மாளிகை முதலியன துறந்து பேரூர் சாந்தலிங்க சுவாமிகளை அடைந்து பல இன்னல்களுக்கு ஆளாகி சீடராகி இருந்தார். அப்போது குருவானவர். அருள்மிகு சாந்தலிங்க சுவாமிகள் அருள்மிகு குமாரதேவரை நோக்கி நீங்கள் திருமுதுகுன்றம் சென்று அங்கு வீரசைவ மடம் ஒன்று நிறுவி பலநூல்களை இயற்ற வேண்டும். என்று கட்டளை இட்டார். குருவின் ஆணையை சிரமேற் கொண்டு விருத்தாசலம் வந்தார். வரும் வழியில் வெயிலின் தாக்கத்தாலும் பசியின் கொடுமையாலும் களைப்பின் காரணமாகவும் திருமுதுகுன்றம், அருள்மிகு பழமலைநாதர் திருக்கோயிலின் முன்உள்ள அரசமரத்தின் அடியில் படுத்து விட்டார். அப்போது அன்னை பெரியநாயகி அடியவன் குமாரதேவன் சோர்ந்துள்ளார், என்று அருள்கூர்ந்து அவனுக்கு அருள் மழைபொழிய வேண்டுமென்று கருணை உள்ளத்தோடு ஞானப்பாலைப் புகட்டினார். அதன்பயனாக திருமுதுகுன்றத்தில் அருள்மிகு குமாரதேவர் வீரசைவ ஆதினத்தை தோற்று வித்து பதினொரு சாத்திரங்களை இயற்றினார்கள்.

ஞானப்பாலை அருந்தியதால் அருள்மிகு குமாரதேவருக்கு அன்னை பெரியநாயகி மரகதவடிவமாகவும் சந்திரனை போன்ற ஒளி முகமாகவும் குருநகையும் கூர்விழியும் கச்சணி தனமும் அரகா என்போர்க்கு பரகதி அளிப்பவராகத் தோன்றினாள். இந்த அருட்பாவை திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினம் இருபதுதாவது பட்டம் சீர்வளர்சீர் சொக்கலிங்க சிவப்பிரகாச சிவாச்சார்ய சுவாமிகள் பாடி வழிபடும் போது அன்னை பெரியநாயகி தாய் நடை இட்டு ஓடி வருவதைப் போன்ற தோற்றமளித்தாள். ஆகையால் அன்னை பெரியநாயகியை ஞானக்குழந்தையாக பாவித்து பெரியநாயகி பிள்ளைத்தமிழ் பாடினார். பத்து பருவங்களாக காப்பு பருவத்தில் அன்னைக்குக் கைக் காப்பு, அன்னைக்கு அணிகலன் திருவடிக்கு கொலுசு, தண்டை கிண்கிணி, அணிவித்து மகிழ்ந்தார். இந்த ஞானக்குழந்தையை விநாயகர் திருமால், முருகன், காளி, போன்ற தெய்வங்களை அழைத்து குழந்தையைக் காக்க வேண்டுமென்று பாடினார். அன்னையை மணமிகுந்த குளிர்ச்சி நீரில் குளிபாட்டி, தலை, கைகால், செவி, போன்ற இடங்களை நீவி முத்தமிட்டார். இரண்டாவது பருவம் செங்கீரைப் பருவம். இதில் பொருள் புரியாத மொழி பேசும் தன்னைத் தானே சிரிக்கும். தன்னைத் தானே ஓலமிடும். இதைக் கேட்டு தாய்மார்கள் மார்போடு அணைத்துக் கொள்வார்கள். மூன்றாவது தாலாட்டு பருவம் இதில் நாவசைத்து குழந்தையை தாலாட்டுவார்கள். நான்காவது சப்பாணி பருவம் இந்த பருவத்தில் கால்வலியோடு கைவலியும் கொண்டு கை கொட்டும்படி அழைப்பார்கள்.

ஐந்தாவதுபருவம் முத்தப்பருவம், தாயானவர்கள் குழந்தைக்கு முத்தம் கொடுப்பார்கள். தனக்கும் முத்தம் தாவென்று வேண்டுவார்கள். ஆறாவது பருவம் வருகைபருவம் அண்ட முழுதும் கரு உயிர்த்த விருத்தாம்பிகையே அழகு பூங்கொடியே வருக வருகவே என்று அழைத்துள்ளார். ஏழாவது பருவம் அம்புலி பருவம் சந்திரனைப் பார்த்துக் குழந்தைக்கு சோறு ஊட்டவா குழந்தைகளோடு விளையாடவா என்றும் பாடியுள்ளார். எட்டாவது பருவம் அம்மானை பருவம்.

ஒன்பதாவது பருவம் நீராடற்பருவம், தேவர்கள் வானவர்கள் இருடிகள் தவசீலர்கள் **அரகரஓம்அர** என ஒலி எழுப்பியும் நீராடுவார்கள் திருமுதுகுன்றம் மணிமுத்தாற்றில் உள்ள புண்ணியமடுவில். அந்த புண்ய மடுவில் நீராட வருகவே என்று பாடியுள்ளார். பத்தாவது பொன்னூசல் பருவம். கொடியிடையழகும் கொங்கையழகும் அழகு தமிழ் இலங்கு தமிழ் தமிழுக்கு அரசியானவளே பெரியநாயகி அம்மையே. பொன்னூசல் ஆடி அருளுகவே என்று சுட்டியுள்ளார்.

அன்னை பெரியநாயகியை ஞான குழந்தையாகப் பத்து பருவங்களாகப் பெரியநாயகி பிள்ளைத்தமிழ் என்ற நூலை திருக்கைலாய பரம்பரை மெய்க்கண்ட சந்தானம் திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினம் அருள்மிகு குமாரதேவர் திருமடத்தில் இருபதாவது பட்டமாக சீர்வளர்சீர் சொக்கலிங்க சிவப்பிரகாச பரமாச்சார்ய சுவாமிகள் பாடியுள்ளார்கள். இந்நூலை 23ஆவது சந்நிதானம் சீர்வளர்சீர் கல்யாணசுந்தர சிவப்பிரகாச பரமாச்சார்ய சுவாமிகள் அவர்களின் இரண்டாவது குருபூசையின் போது 14.02.2016 பரணி நட்சத்திரத்தில் திருக்கைலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினம் அருள்மிகு குமாரதேவர் மடம் 24ஆவது சன்னிதானம் சீர்வளர்சீர் இரத்தினவேலாயுத சிவப்பிரகாச பரமாச்சார்ய சுவாமிகள் அகமகிழ்ந்து வெளியிடுவது சால சிறந்தது. 24ஆவது குருமகா சன்னிதானத்தின் திருவடிகளை வணங்கி மகிழ்கிறோம்.

ஆன்மீக பெரியோர்களும் அருள் உள்ளம் படைத்த அன்பர்களும் எல்லோரும் பெரியநாயகி பிள்ளைத்தமிழைப் படித்து திருவருளையும் குருவருளையும் பெற வேண்டுமென்று வேண்டுகிறோம்.

சிவாய நம, சிவாய நம

அகமகிழும் அன்பன்

**திரு.M.பாலசண்முகசுந்தரம்,**
கௌரவ நிர்வாகி,
அருள்மிகு குமாரதேவர் மடம்,
விருத்தாசலம் .

**வ.பாலசுப்பிரமணிய பத்தர்,**
ஓதுவா மூர்த்தி,
அருள்மிகு குமாரதேவர் மடம்,
விருத்தாசலம்.

உ

சிவமயம்

# பதிப்புரை

முனைவர் சு.தங்கத்துரை,
ஆதீனப்புலவர்.

## அருள்மிகு பெரியநாயகி அம்மை துதி

பச்சைமலை பவளமலை தனித்தோற்றம் போலப்
பரிவுடைய திருவடியும் அம்மலை மேலுற்ற
மெச்சு மதித்திருமுகமும் பொய்ச்ச திருவிடையும்
விழிமூன்றும் கர நான்கும் பெரியநாயகியார்
கச்சிருந்த முலைத்தடமும் அமுத வாக்குங்
கருங்குழலும் வெண்ணகையுஞ் செய்யவாயும்
நச்சும் அடியவர் பிறவி அறுக்குந் தாளும்
நைந்துருகிப் புந்தியினில் சிந்தைசெய்வாம்.
(விருத்தாசல புராணம் - 3)

மக்களை நெறிப்படுத்தி உயர்த்தும் இலக்கியங்களில் அறம் பொருள் இன்பம் வீடு பற்றிய செய்திகள் நிறைந்து காணப்படும். இவற்றில் சில கூறுகள் உடைய நூற்களைச் சிற்றிலக்கியங்கள் என்பர். சிற்றிலக்கியங்கள் தெய்வங்களையும் மக்களையும் புகழ்ந்து எழுதப்பட்டவைகளாகும். இந்தவகை இலக்கியங்களுக்கு யாப்பமைப்பு வரையறை இல்லை.

காலச்சூழலும் கவிஞர்களின் எண்ணங்களும் ஆக்கத் திறனும் சமுதாயச் சூழலும் புதுப்புது இலக்கிய வகைகள் தோன்ற காரணமாயின. இதனால் சிற்றிலக்கிய வகைகள் விரியத் தொடங்கின. சிற்றியலக்கியவகைகள் தொண்ணூற்றாறு என்ற வரையறை இருந்ததாக பிரபந்தமரபியல் நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது. அந்த எல்லைத் தாண்டி முந்நூற்றுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் தமிழில் உள்ளன என முனைவர் ச.வே.சு.(தமிழ் இலக்கிய வகையும் வடிவும், 1984, ப.294) குறிப்பிட்டுள்ளார். இன்றையக் காலக்கட்டத்தில் சிற்றிலக்கிய வகை விரிவடைய வாய்ப்புகள் உள்ளன எனவும் எண்ணத் தோன்றுகிறது.

சிற்றிலக்கிய வகைகளில் முதலில் சொள்ளப்பட்டுவது பிள்ளைத்தமிழ் வகையாகும். இதனைப் பிள்ளைப்பாட்டு, பிள்ளைக் கவி எனவும் கூறுவர்.

தொல்காப்பியப் புறத்திணையில்உள்ள, "குழவி மருங்கினும் கிழவதாகும்" (82) என்ற நூற்பாவே பிள்ளைத்தமிழ் நூல் தோன்றுவதற்கு அடிப்படை என்பர். கி.பி.12ஆம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தர் இயற்றிய குலோத்துங்க பிள்ளைத்தமிழ் தான் முதன்முதலில் தோன்றிய முழுமையானப் பிள்ளைத்தமிழ் நூலாகும்.

பிள்ளைத்தமிழ்ப் பாடல்களைச் சுட்டிக்காட்ட, "தொன்னூல் விளக்கம்" என்ற நூலில்

"பத்து உறுப்பாய் ஒவ்வொன்று விருத்தம்

பப்பத்தாகப் பாடல் என்ப" என பத்துப்பருவங்களையும், பவருத்திற்குப் பத்துப்பாடல்கள் வீதம் 100 பாடல்களைக் கொண்டதாக அமையும் என குறிப்பிடப்பட்டுள்ளது. சில பிள்ளைத்தமிழ் நூற்களில் சில பாடல்கள் அதிகமாகவும் இருக்கும். விருத்தாம்பிகை பிள்ளைத்தமிழில் அபிசேகப்பருவம் என்ற ஒரு பருவத்தைச் சேர்த்து 111 பாடல்கள் கொண்டுள்ளதாகக் காணப்படுகிறது.

பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரண்டு வகைப்படும். காப்பு, செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி ஆகிய ஏழுபருவங்களும் இரண்டு பிள்ளைத்தமிழுக்கும் பொதுவான வையாகும். ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்ற பருவங்களும் பெண்பாற் பிள்ளைத்தமிழில் கழங்கு, அம்மானை, ஊசல் ஆகிய மூன்று பருவங்களும் காணப்படும்.

சில பெண்பாற் பிள்ளைத்தமிழில் கழங்கு என்ற பருவத்திற்குப் பதிலாக நீராடற் பருவம் அமைந்திருக்கும். பெரியநாயகிப் பிள்ளைத்தமிழில் கழங்குக்குப் பதிலாக நீராடல் என்ற பருவம் அமைந்துள்ளது. முத்திமுத்தாறு இத்தலத்தில் பெயர் பெற்று விளங்கியதாலும், பெரியநாயகியின் வடிவமே மணிமுத்தாறு,

"சீரார் முத்தநதி என்று திகழ்ந்த நாமம் சிவன்அருள
ஏரார் சத்தித் திருவுருவமாய் இறைவற்கிதமாய்
(தீர்த்த சருக்கம். 2.3,4)

என விருத்தாசலப் புராணம் குறிப்பிடுவதாலும் நூலாசிரியர் நீராடல் பகுதியைச் சேர்த்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

நூலின் பெரும்பகுதியிலும் பெரியநாயகி என்ற சொல்லாட்சிக்குப் பதிலாக விருத்தாம்பிகை என்பதையே காணமுடிகிறது. அம்புலி பருவத்தில், பெரியநாயகி என்ற பெயரை எட்டு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. எவ்வாறு பெரியநாயகி பிள்ளைத்தமிழ் என்று பெயர் சூட்டினார். இது ஆய்வுக்குரியதாகும். ஆனால் விருத்தாம்பிகைப் பிள்ளைத்தமிழில் அதன் ஆசிரியர் இரா.வாலை குருசுவாமிகள் முத்தப்பருவத்தில் மூன்று இடங்களில் மட்டும் பெரியநாயகி என்று குறிப்பிட்டுள்ளார், பிற இடங்களில் விருத்தாம்பிகை என்ற சொல்லாட்சியையே பயன்படுத்தியுள்ளார்.

அருள்மிகு பெரியநாயகி உடனுறையும் அருள்மிகு பழமலைநாதர் திருக்கோயிலின் சிறப்புகளை இந்நூலாசிரியர் அருள்தரு சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள் இனிமையான வார்த்தைகளால் அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

குமார தேவரின் சிறப்புகளைப் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார்.

"சகசமதுறவு உபதேசித்து அடிமுடி சாற்றிக் குமரன் வாய்க்
கும்பவளப் பால் ஊட்டிடு கைக்கொடு கொட்டுக சப்பாணி"
(சப்பாணிபருவம்.6.6,7)

என குமாரதேவர்க்கு அருள்மிகு பெரியநாயகி ஞானப்பால் ஊட்டிய வரலாறைச் சுட்டியுள்ளார்.

சுந்தரரைப்பற்றிய செய்தியைக் குறிப்பிடும் போது,

.............. "வன் தொண்டன் ஒருகால்
ஊருங்கிழம் இவர்பேரும் கிழம் எழில்உறுநதியும்கிழமேல்"

எனக் குறிப்பிட்டுள்ளார். (சப்பாணி பருவம். 8.2,3)

திருஞானசம்பந்தர் வருகை, குருநமச்சிவாயர் செய்தி போன்று பலசெய்திகளையும் நூலாசிரியர் எடுத்தாண்டுள்ளார். இவைபோன்ற இத்திருமுதுகுன்றத்தின் பெருமைகளையும் புராணக் கூறுகளையும் சித்தர்கள் பற்றிய செய்திகளையும் ஆங்காங்கே விளக்கியுள்ளார்.

ஒரு பிள்ளைத்தமிழ் நூலை இவ்வளவு இனிமையாக எளிமையாக இயற்ற முடியுமா என்ற உணர்வு தோன்றும் வண்ணம் ஆசிரியர் அமைத்துள்ளார். எனவே எல்லோரும் இந்தப்பிள்ளைத்தமிழ் நூலைப் படித்து அருள்மிகு பெரியநாயகியின் திருவருளைப் பெற்று உய்யுமாறு விண்ணப்பிக்கின்றோம்.

திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினத்தின் 23ஆவது குருமகா சந்நிதானம் **சீர்வளர்சீர் கல்யாண சுந்தர சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்,** ஆதினத்தின் நூற்களை வெளிக் கொணர வேண்டும் என்ற எண்ணம் கொண்டு 18 நூற்களை வெளியிட்டுள்ளார்கள். சுவாமிகள் மேலும் பல நூற்களை வெளிக் கொணரத்திட்டம் தீட்டி இருந்தார்கள். சுவாமிகளின் எண்ணங்களை நிறைவேற்றும் வண்ணமாக 24ஆவது குருமகா சந்நிதானம் அவர்களும் ஈடுபட்டுள்ளார்கள். அவர்கள் பட்டம் ஏற்ற பிறகு இரண்டாவது நூலாக இந்த அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ் வெளி வருகிறது. பழமையை பொன்போல போற்ற வேண்டும் என்பது சான்றோர் வாக்கு. எனவேதான் இதற்குமுன் பதிப்பித்த இரண்டு பதிப்புகளின் முன்னுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றில் பல அரிய சிந்தனைகளும் உள்ளன.

37ஆண்டுகளுக்கு பிறகு இந்நூல் வெளிவர ஆட்படுத்திய ஆதீனத்தின் 24ஆவது குருமகா சந்நிதானம் **சீர்வளர்சீர் இரத்தின வேலாயுத சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்** அவர்களின் அன்புக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நல்.முருகேசமுதலியார் முன்னுரையில் அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழோடு ஒப்பிட்டு படிக்க வேண்டிய நூல் அருள்மிகு குமாரதேவர் பாடிய பெரியநாயகிம்மை பதிகம் என்று குறிப்பிட்டு இருப்பதால் இந்த நூலுடன பதிகமும் சேர்தது வெளியடப்பட்டுளளது.

**இந்நூலை குறிப்பிட்ட காலத்துக்குள் அச்சிட்டு உதவிய கிருஷ்ணா மறுதோன்றி அச்சக உரிமையாளருக்கும் உதவியாளர்களுக்கும் எங்களது அன்புகலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

14.02.2016

என்றும் இறைபணியில்

சு.தங்கத்துரை

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருக்கைலாய பரம்பரை.திருவண்ணாமலை.துறையூர். திருமுதுகுன்றம். ஆச்சாரியர்கள் முத்தியடைந்த தல. திருநட்சத்திர விளக்கம்

| எண் | ஆச்சாரியர்கள் | பரிபூரணதலம் | மாதம் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| | மெய்கண்ட தேவர் | -திருவெண்ணெய்நல்லூர் | -ஐப்பசி | - சுவாதி |
| | அருணந்தி சிவாசாரியர் | - திருத்துறையூர் | -புரட்டாசி | - பூரம் |
| | மறைஞான சம்பந்த சிவாசாரியர் | - திருக்களாஞ்சேரி | - ஆவணி | -உத்திரம் |
| | உமாபதி சிவாசாரியர் | - கொற்றவன்குடி | - சித்திரை | - அஸ்தம் |
| | அருள் நமச்சிவாயர் | - ,, | - மார்கழி | - திருவாதிரை |
| | சிவப்பிரகாச சித்தர் | - பொதிகை | - ஆடி | - அசுவனி |
| | நமச்சிவாய தேசிகர் | - திருவாவடுதுறை | - தை | - அசுவனி |
| 1. | சிவப்பிரகாச தேசிகர் | - பட்டீச்சுரத்துக்கு அடுத்த வடதளி பக்கமுள்ள முழையூர் | - ஆனி | - பரணி |
| 2. | ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர் | - சிவன்பாக்கம் | - மாசி | - மகம் |
| 3. | மூலலிங்க சிவப்பிரகாச தேசிகர் | - தரணி | - பங்குனி | - உத்திரம் |
| 4. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | - கொற்றவன்குடி | - வைகாசி | - திருவாதிரை |
| 5. | குமாரதேவ சிவப்பிரகாச தேசிகர் | - திருமுதுகுன்றம் | - புரட்டாசி | - பூரம் |
| 6. | நமச்சிவாய சிவப்பிரகாச தேசிகர் | - பசும்பலூர் | - சித்திரை | - அஸ்தம் |

| எண் | ஆச்சாரியார்கள் | பரிபூரணதலம் | மாதம் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 7. | நன்னூல் சிவப்பிரகாச தேசிகர் | - அரியலூர் | - வைகாசி | - விசாகம் |
| 8. | அருணைச் சிவப்பிரகாச தேசிகர் | - திருவண்ணாமலை | - ,, | - ,, |
| 9. | கருணைச் சிவப்பிரகாச தேசிகர் | - ,, | - ,, | - ,, |
| 10. | பரஞ்சோதி சிவப்பிரகாச தேசிகர் | - துறையூர் | - ,, | - சுவாதி |
| 11. | நல்லநாயக சிவப்பிரகாச தேசிகர் | - ,, | - தை | - பூசம் |
| 12. | சிற்றம்பல சிவப்பிரகாச தேசிகர் | -பட்டீஸ்வரம் | - வைகாசி | - மகம் |
| 13. | பொன்னம்பல சிவப்பிரகாச தேசிகர் | -முழையூர் | - மாசி | - மகம் |
| 14. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | -கொற்றவன்குடி | - ஆடி | - உத்திரம் |
| 15. | கருணைச் சிவப்பிரகாச தேசிகர் | -துறையூர் | - ஆடி | - அசுவணி |
| 16. | நஞ்சுண்ட சிவப்பிரகாச தேசிகர் | -துறையூர் | - ,, | - அசுவணி |
| 17. | குழந்தைவேல் சிவப்பிரகாச தேசிகர் | -துறையூர் | - ,, | - அசுவணி |
| 18. | வைத்திலிங்க சிவப்பிரகாச தேசிகர் | -துறையூர் | - ஆனி | - பரணி |
| 19. | குமார சிவப்பிரகாச தேசிகர் | - ,, | - மாசி | - விசாகம் |
| 20. | சொக்கலிங்க சிவப்பிரகாச தேசிகர் | -திருமுதுகுன்றம் | - வைகாசி | - புரட்டாசி |
| 21. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | -திருமுதுகுன்றம் | - தை | - கிருத்திகை |
| 22. | சுப்ரமண்ய சிவப்பிரகாச தேசிகர் | -திருமுதுகுன்றம் | - மார்கழி | - புனர்பூசம் |
| 23. | சீர்வளர் சீர் கல்யாணசுந்தர சிவபிரகாசபரமாசாரிய சுவாமிகள் | - திருமுதுகுன்றம் | - மாசி | - பரணி |

## சந்தான குருபரம்பரை துதி

திருச்சிற்றம்பலம்

புண்ணியன் கைலைக் குருபரம் பரையில்
போர்ந்த மெய்கண்ட சந்தியில்
பொருவில் சீர்த் துறைசை நகர்வளர்
சிவப்பிர காசர் தம்பொன்னடி புனைந்த
எண்ணில்நல் தவத்துச் சாந்த லிங்கேசன்
எல்லையின் மோனானந்த நிலையாம்
இரும்பொருளும் அளிந்த விருத்த அம்பிகையாள்
இன்புறும் குமராசக் குரவன்
திண்ணிய அருள்சேர் சிதம்பரத் தேவன்
செப்புறும் பழனி மாமுனிவன்
திருஅமர் ஆறுமுகன் குருவாகத்தான்
செப்பும் வேலாயுதத் திறலோன்
கண்ணினுக்கு இமையாம் குழந்தை வேலடியான்
கருமம் களைந்த முத்தையன்
கருதும்இச் சந்தானக் குரவர்கள் தாள்
கமலம் உள்நினைந்து கை தொழுவாம்.

திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம்

**அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள்**

**திருவாய் மலர்ந்தருளிய**

# திருமுதுகுன்றம்

# அருள்மிகு பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்



## பாயிரம்

அத்துவித ஆனந்த நித்யபரி பூரண
அகண்ட சின்மய வடிவமாய்
அமர் விருத்தாம்பிகைத் திருவடிக்கு அவள்அடி
அடைந்து முதுகிரி அதனில் வாழ்வு
உற்றிடு குமாரதேவக் குருபரன் பொன்அடி
ஒண்பணி விடைசெய் தொண்டன்
ஓதும் இப்பிள்ளைத் தமிழ் சாலி வாகனத்து
உறும் ஆயிரத் தெண்ணூற்றோடு
ஒத்த பதி னொன்றான சருவதாரிப் பெயர்
உறும் வருடம் ஆனி மதியில்
ஓங்கும் இருபத்தைந்து தேதி சனி வாரமுடன்
உறும் அமர பக்கம் அதனில்
சொற்ற ஐந்தான நட்சத்திரத் திதியே
துனுந் த்ரயோ தசிமு தலவாச்
சூழும் இச் சுபதினஞ் சொக்க லிங்கத்தவன்
சூட்டினான் பாமாலையே.

**பொழிப்புரை:** ஓரேவிதமான ஆனந்தமும் நிலையான பரிபூரணமும் பரந்துபட்ட அறிவுமயமான வடிவமாய் அமைதியாக முதுகிரியில் எழுந்தருளி அருள்பாலிக்கும் விருத்தாம்பிகை என்னும் அருள்மிகு பெரியநாயகியை அடைந்துள்ள குருபரனான குமாரதேவர் பொன்அடியை பொருந்தி பணிசெய்யும் தொண்டன் சொக்கலிங்க வனாவன். இந்தப் பிள்ளைத்தமிழ் பாமாலையை சாலிவாகனத்து சருவதாரி ஆண்டு (1811) ஆனி மாதம் 25ஆம் நாள் சனிவாரமுடன் உறும் திரயோதசி சுபதின நன்னாளில் பாடினான்.

# 1.காப்புப் பருவம்

## விநாயகர் துதி

1. பொன்பூத்த மணிநிறப் பூவைவண் ணக்குரிசில்
போந்து வந்தித்து இரந்தே
பொருவில் திருமுன் செய் விகடக் கூத்தினைக் கண்டு
புகல்விலா இறை நகைத்தே
தென்பூத்த திருவுளம் இரங்கிஎழில் சக்கரம்
தீர்த்தர்க்கு அளித்து உலகு எலாஞ்
செய விகட சக்கரவி நாயகன் எனப் பெயர்கொள்
செம்மல் இரு தாள் துதிப்பாம்
மின்பூத்த சடைமௌலி முதுகிரிப் பரமன்இரு
விழிகள் களிதூங்க எழிலாம்
விருந்திட்டிடப் புறம் இருந்திட்ட மதுதந்த
விமலி ஜெக தாம்பிகை அமிழ்
தின்பூத்த வாலாம்பிகை பிரம ராம்பிகை
எழிற் சுந்தராம்பிகை யெனக்கு
இருதாள் அளித்த பழமலை விருத்தாம்பிகை
இயற்றமிழ் தகைக்க வென்றே.

**(பொ.ரை)** பொன்போன்ற நிறம்உடைய இலக்குமியிடம் திருமால் அணுகி வணங்கி குறையை முறையிட்டு, உவமையற்ற மங்கள வடிவான விநாயகர் ஆடிய விகடக் கூத்தினைக் கண்டு இறைவன் நகைத்தான். அழகுவாய்ந்த திருஉள்ளம் இரங்கி அழகான சக்கரத்தை உடைய திருமாலுக்கு உலகுஎல்லாம் அளித்து வெற்றியுடைய விகட சக்கர விநாயகன் என்னும் பெயர் கொண்டுள்ள எம்பெருமானுக்கும் தலைவன் திருவடியை வணங்குவோம்.

---

சருவதாரி-இருபத்திரண்டாவது ஆண்டு

ஒளி பொருந்திய சடை முடியை உடைய பழமலைப் பரமன் இருகண்களும் ஆனந்தம் பெருக அழகும் விருந்தும் கொண்டு இடதுபுறம் இருந்து பழமலைநாதர் நினைத்தவற்றை அருளி கொண்டிருக்கும் குற்றமில்லாத தூய சத்தியாகிய விமலி, ஜெகதாம்பிகை, அமிழ்தத்தில் தோன்றிய வாலாம்பிகை, பிரமராம்பிகை, அழகுபொருந்திய சுந்தராம்பிகை எனக்கு இரு திருவடி காட்சி கொடுத்த திருமுதுகுன்றத்தில் வீற்றிருக்கும் பெரியநாயகி ஆகியோர்கள் இந்த அடியேன் பிள்ளைத்தமிழைப் பாட கவசமாக இருக்க வேண்டும்.

**விகட சக்கர விநாயகன்** தக்கன்யாகத்தில் விட்டுணுவிடுத்த சக்கரத்தை வீரபத்திரரின் கையிலுள்ள கபாலம் கவ்வியது. சேனாதிபதி விடுபசேனன் சக்கரத்தைத் தந்துவிட விகடக் கூத்தாடி கேட்டான். கபாலம் நகைக்க, சக்கரம் விழுந்தது. அதை விநாயகக் கடவுள் கவர்ந்து கொண்டார். விடுபசேனன் அவர் முன்னும் விகடக் கூத்தாடிகெஞ்ச, விநாயகர் சக்கரத்தைக் கொடுத்தருளினார். அதனால் விநாயகர்க்கு விகடச் சக்கரக் கணபதி என்று பெயர் வழங்கலாயிற்று. இது கச்சியில் நடந்தது. கச்சப் பேசுரர் கோயில் விநாயகருக்கு இந்தப் பெயர் வழங்கலாயிற்று. கந்தபுராண முதல் பாட்டில் இப்பெயர் போற்றப்படுகிறது (காஞ்சிபுராணம்).

**விகடக்கூத்து**- கால் இரண்டையும், கை இரண்டையும் வளைத்து வாயையும் நாசியையும் கண்களையும் சுரித்து அசைத்து, பற்கள் தோன்ற ஆடுவது.

திருப்பட்டீச்சரம் வடதளி அம்பாளின் பெயர் - விமலி (தூயசத்தி) திருவண்ணாமலை, துறையூர் ஆதீனத்தின் முதற்குருவின் குருமூர்த்தம் பட்டீச்சரம் அருகில் உள்ள முழையூர் என்ற கிராமத்தில் உள்ளது.

| | | |
|---|---|---|
| ஜகதாம்பிகை | - | திருவலிதாயம் |
| பாலாம்பிகை | - | திருநெய்த்தானம் |
| பிரமராம்பிகை | - | திருப்பருப்பதம் |
| ஜோதிலிங்கம் | - | வீரசைவ பஞ்சாசாரியர்களுள் ஒருவர் தோன்றிய தலம் |
| சுந்தராம்பிகை | - | திருமீயச்சூர். |

①

## திருமால்

2. ஏர்மேவு பாற்கடலின் ஆலடையின் ஆகணையில்
என்றும் அறிதுயில் கொண்டு உணர்ந்து
எண்ணில் அண்டத்துச் சரவசர உயிர் அத்தனையும்
இன்புற அளித்தும் அருளால்
நார்மேவு பக்த கோடிகள் புரிதவத்தருமை
நாடி எக்காலும் நசியா
நற்பரம பதநாடளிக்கும் ஒரு கடவுள் அடி
நாண்மலர் தனைத் துதிப்போம்
சீர்மேவு வன்னி நிழற் குடிகொள் பழமலைச்
செல்வர்க்கு இன்ப வெள்ளந்
தேக்கி வழிதர அவர் புறத்தொடு புறம்படரும்
திவ்ய பச்சைக் கொடியைச் செந்
தார்மேவு கூத்தன் மடமானைப் பசுந்தேனை
தளர்நடை யனப் பேட்டினைச்
சாயன் மயிலைக்குயிலை விருத்த நாயகியைப்போற்
றையலை அளிக்க வென்றே.

**(பொ.ரை)** அழகு பொருந்திய பாற்கடலில் ஆலயிலையில் வியப்பான திரண்டவடிவுடன் என்றும் பள்ளிகொண்டு, எண்ணிலடங்காத அண்ட சரசாரத்து உயிர்கள் அத்தனையும் இன்புற காத்தும் அன்பு மிகுந்த அருளால் பக்தர்கள் புரிகின்ற தவத்தின் அருமைக்கு தக்க, எக்காலும் ஈனமின்றி நல்ல பரமபதத்தை நாள்தோறும் கொடுக்கும் திருமாலின் பாதமலர்களைப் போற்றுவோம். பெருமை உடைய வன்னிமரத்தினை தலமரமாகக் கொண்டுள்ள அதன் நிழல்கீழ் வாழும் திருமுதுகுன்ற மக்களுக்கு இன்பவெள்ளத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும், சிவபெருமானைப் பிரியாத பாகம் கொண்டிருக்கின்ற, அவரது கருணையைப் படர்ந்து திகழச் செய்யும் அழகான பச்சைக் கொடியை, கொன்றை மாலையை அணிந்திருக்கின்ற கூத்தனின் மானை, பசுந்தேனை, தளர்ந்த நடைபோன்ற பெண்போன்ற அழகு மயிலைக்குயிலை பெரியநாயகியைப் போன்ற பெண்ணைக்கொடுப்பாயாக. ②

## பழமலை நாதர்

3. நறைமிகு கொன்றை, கோங்கு, நதிமதி, தும்பை, தூர்வை
நகுதலை என்றும் ஓங்க - வளர் சடைக்கு ஏற்றினர்
நலமிகு அநங்கன் மேனி அவுணர் புரங்கள் ஊழி
நடலைகள் கொண்டு தீட்டு - புண்டரக் கீற்றினர்
குறைவில் தவக்குமாரன் அயர்வறப் பந்தர் நீழற்
குளிர்புனன் மொண்டு சாலின் - மொன்டு கை நீட்டினர்
குலவரசு அன்னமேறு கடவுள் அகந்தை மாளச்
சிரமத கழ்ந்து காரி - செங்கரத்து ஏற்றினர்.
மறைமுதல் அங்கம் ஆறும், வலதவரையமாற
வடதரு தங்கி ஞானச் - சுடரகத் தேற்றினர்
மயிலையில் சம்பைமேவு முனிகொடு கும்பமேவு
மடமயில் என்பின் ஊடும் - உயிர்வரத் தோற்றினர்
அறைகடல் என்று மேவிக் கடைபொழுது இந்திராதி
முறைசெவி கொண்டு காரி-கண்ட மட்டாற்றினர்
அருள் விபசித்து தாளின் அணிநிழல் பெற்றுவாழ
அருள் பழமலைப் பரேசன்-அடியிணை போற்றுதும்
நிறை சுகம் என்றுதேவர் அமுதை இகந்து வீசு
நிகரில் சுவைச்சொல் பேசும் - அஞ்சிறைப் பூவையை
நிதமும் உள் அன்பினோடு பரவும் மெய் அன்பர்காண
நிச தரிசனஞ் செய மேவி-நின்ற மெய்க் காட்சியைச்
சிறையளி கிண்டிநாளும் மிடறு திறந்துபாடிச்
செறிநற வுண்டுவாழ் சுகந்த-நற்றூட் பொதி
செவிய வலங்கல் சூடு செயல்செய் அரம்பை மாதர்
சலசம் இருந்த மாதர் நின்று-கைக் கூய்த்தொழ
மறைதுதி கொண்ட தாளின் விரைமலர் கொண்டுதூவிச்
சுரர் தினமும் செய்பூசை - கொண்டவற்கு ஏற்றிடு
மலிசுக சந்தநாடு புகவருள் பொங்கர் வாழும்

அதிரச செஞ்சொல் பேசும்-அஞ்சுகப் பேட்டினைக்
கறையிருள் தின்று வீசு கதிர்மணித் தொங்கன்மேவு
கமழ் நறுசந்த மோடு - குங்குமச் சேற்றினை
கதிர்முலை கொண்டு உலாவு மயிலை வளங்குலாவு
கவின்முது குன்றின் மேவு-கன்னியைக் காக்கவே.

**(பொ.ரை)**

தேன் நிறைந்த கொன்றை, கோங்கு, கங்கை நதி, மதி, தும்பை, அழகு போன்றவற்றை சடையில் அணிந்திருப்பவன். உருவமற்றவனாக இருப்பவன். அசுரர்களின் மூன்று கோட்டைகளை அழித்து அந்த சாம்பலைக் கொண்டு திரிபுரண்ட விபூதி அணிந்தவர். குறைவில்லாத தவக்குமாரரான அருள்மிகு குமாரதேவர்க்கு அயர்வுநீங்க பந்தல் நிழல் அமைத்து குளிர்நீர் சாலினால் கொடுத்தவர். அன்னத்தை வாகனமாகக் கொண்ட ப்ரமனின் அகந்தையை மாற்ற தலையை அரிந்து தன்கையில் ஏற்றினவர். திருமுறை முதல் ஆறு அங்கம்வரை சந்தனர் முதலிய முனிவர்களுக்கு ஐயம் நீங்க வடவால மரத்தின் கீழ் இருந்து ஞானச்சுடரைக் கொடுத்தவர். மயிலாப்பூரில் சம்பை நகரில் தோன்றி, திருஞானசம்பந்தர்க்காக கும்பத்திலிருந்த என்பிலிருந்து பூம்பாவையை உயிர்பெறச் செய்ய அருள்புரிந்தவர். கடலால் சூழப்பட்ட இந்த பூமியில் இந்திரன் பட்ட அவதியை மாற்றியவ்ர்.* அருள்மிகு விபசித்து முனிவரின் திருவடி நிழல்பெற்று வாழ திருப்பணி செய்த பெருமைக்கு அருள்புரிந்த பழமலைப்பரமனின் திருவடிகளைப் போற்றுவோம்.

---

***விபசித்து முனிவர்:**

கோவல நாட்டுவேதியன் மணிமுத்தாநதியில் நீராடி வந்த பலனால் விதர்க்கணரால் மணிமுத்தா நதியின் பெருமையைக் கேட்டு அறிந்து குபேரன் தங்கை கொடுத்த ஆபரணங்களைப் பெற்று அருள்மிகு பழமலை நாதர் திருக்கோயிலில் சிவத்திருப்பணி செய்தவர் (பார்க்க: விருத்தாசல புராணம்) விபசித்து முனிவரின் சிலை திருக்கோயிலின் வன்னியடிமரத்தின் பக்கத்தில் உள்ளது.

முழு சுகம் என்று தேவர்கள் அமுதத்தை இழிவுபடுத்தி வீசி ஒப்புமை இல்லாத சுவையாகப்பேசும் பெரியநாயகியை, நாள் தோறும் உள் அன்போடு வழிபடும் மெய்யன்பர்களுக்காக ஞானேந்திரியர்களால் காணும் காட்சியைக் கொடுக்கின்ற உண்மைக்காட்சியை நாளும் ஆராய்ந்து அழகுள்ளவள் அளிக்கின்ற பாடல்களை இனிமையாக கேட்டு மகிழ்ந்து வாழ்கின்ற தாமரை மலரில் வீற்றிருக்கின்ற தாயை கைகூப்பித் தொழுகின்ற தெய்வப்பெண்டீர்கள் செயல்கள், வேதங்களைத் துதித்து திருப்பாதங்களில் மணம் கொண்ட மலர்களைத் தூவி தினமும் வழிபாடு செய்யும் வானோர்களை ஏற்றுக்கொண்டு முத்திக்கு அருள்கொடுக்கும் பழமலைவாழும் இனிமையான செஞ்சொல் பேசும் கிளிபோன்றவளை, நஞ்சு உண்டு கதிர்வீசும் அடியார் உள்ளங்கவர்ந்தவன். குடியிருக்கும், சந்தனம் வீசுகின்ற, குங்குமம் நிறைந்த ஒளிபொருந்திய முலையோடு உலாவிக் கொண்டிருக்கும் பழமலைநாதர் மயிலை வளங் கொண்டாடும் திருமுதுகுன்றில் வாழும் கன்னியாகிய அருள்மிகு பெரியநாயகியைக் காக்கவேண்டும். ③

## ஆழத்துப் பிள்ளையார்

4. ஒருகோடு இரண்டுசெவி முக்கணால் வாயைங்கை
யோடு ஆறு மதமும் உடையதோர்
உம்பல் மாதவர்கள் தமது உள மௌன கூட்டத்தின்
உறு பரம வைராக்கியமாப்
பெருமை பெறு தறியிற் பிறங்கன்புத் தொடர்பூட்டிப்
பிரிவற இருத்தி நாளும்
பேசரும் உயிர்ப்போத கவளம்இட உண்டு, அவர்கள்
பிரிய குறிப்பின் ஒழுகி

அருமையொடு விளையாடும் ஆழத்துப்பிள்ளை இணை
அடிமலர் தனைத் துதிப்பாம்
ஐம்பொன் மணி மாடமீது ஆர்த்த கொடி வெண்மதியின்
அகடு கீண்டு ஒழுகும் அமுத
அருவியாய் செந்நெற் படப்பைகள் வளஞ் செறியும்
அணிமுது கிரிக்கண் அமரும்
ஆய்மயிற் பெடையை விருத்தாம்பிகை எனுஞ்சேயை
அன்பொடு புரக்க என்றே.

**(பொ.ரை)**

ஒரு கொம்பு இரண்டு செவி மூன்றுகண் வாய் ஐங்கையோடு ஆறு மதமும் உடைய, மேலான மாதவத்தவர்கள், தமது உளமாகிய மௌனக் கூட்டத்தில் மிக்க வைராக்கியமாய் பெருமை பெறக்கூடிய தூணில் ஒலிக்கின்ற சங்கிலி பூட்டி, பிரிவில்லாமல் நாளும் பேசக்கூடிய ஆன்ம அறிவு என்னும் உணவுக்கு இடமுண்டு. அவர்களின் அன்பான குறிப்பின்படி நடந்து அருமையாக விளையாடும் ஆழத்துப் பிள்ளையின் இரண்டு திருப்பாதங்களைப் போற்றுவோம்.

ஐம்பொன்னாக விளங்கும் மாடம் மேல் கொடி போல வெண்மதியின் நடு பிளந்து ஒழுகும் அமுத அருவிபாய்கின்ற செந்செற் நிறைந்த நிலங்கள் விளங்கொளிக்கும் அரன்போன்ற பழமலையின் கண் எழுந்தருளியிருக்கும் அழகான பெண் மயில் போன்ற பெரியநாயகி என்னும் குழந்தையை அன்போடு காக்க வேண்டும். ④

## சுப்பிரமணியர்

5. கள்ளார் இதழித் தொடைப் பெருமான்
கரகங் கணம் போய்ச் சடையொளிப்பக்
கரிய திருமாற் கரச்சங்கிற்
கட்டும் அவன் பாய்ச் சுருட்டொளிப்ப

விள்ளா அடிப்பைஞ் சிறைத் தோகை
விரிக்கு மஞ்ஞைப் பிரிநடத்தி
விழை குஞ்சரியை மணம்புரிந்த
வேலோன் திருத்தாள் மிகத்துதிப்பாம்
பொள்ளா மணிமுத் தலை கொழிக்கும்
புனித நதிசூழ் கிடந்தொளிரும்
பொருவில் அயன்மால் முதல்அமரர்
போந்து பார்த்து உள் அதிசயிக்குந்
தெள்ளார் அமுதை வள்ளிநிழற்
சேர்ந்து முளைத்த பவள வண்ணத்
திருமா முதுகுன் றிடைப்படர்ந்து
திகழ் பைங் கொடியைப் புரந்திடவே.

**(பொ.ரை)**

சிவபெருமானின் கையில் அணிந்திருந்தபாம்பு அவருடைய சடையில் ஒளித்தது. கரியநிறமுடைய திருமாலின் கையிலுள்ள சங்கு அவர் பள்ளி கொண்டிருக்கும் பாம்பணையினுள் ஒளித்தது.

நழுவாத சிறந்த தோகைவிரிக்கும் மயில் ஊர்தியில் சென்று தேவயானையைத் திருமணம் புரிந்த வேலுடைய முருகனின் திருப்பாதங்களைப் போற்றிடுவோம்.

மணி, முத்து அதிகமாக கிடைக்கும் புனித நதியான திருமணிமுத்தாறு சூழ்ந்துள்ள அதிசயக்கும்படி பார்க்கின்ற அமுதம்போன்ற வள்ளியோடு சேர்த்து நித்தம் வாழும் பவள நிறமுடைய திருமுதுகுன்றிடை வாழ்ந்து கொண்டிருக்கின்ற பைங்கொடியான பெரியநாயகியை முருகப்பெருமான் காத்திட வேண்டும். (5)

## நான்முகன்

6. அலைஏறி டும்பாற் கடற் குடம் நிகர்த்த வளை
அது வயிறுளைந்து ஈன்றமுத்
தாம் எனவும் அதனில் எழு நிறை மதியும் என ஒளிரும்
அஞ்சிறைச் செஞ் சூட்டனம்
விலையேறு குரகதங் கடவி வெள்ளைக்கமலம்

வீற்றுறும் அளப் பேட்டினை
விழைவொடு மணந்து அரிபொன் னுந்திமலர் வந்துலகை
வீதி கடவுளைத் துதிப்பாம்.
கலையேறு மதியமுது உகுப்பும் படவராக்
காரி வாயிடை கக்கவுங்
கையேறு மானலறச் சிற்சபையில் நடனமிடு
கடவுள் மகிழுந் துணைவியைச்
சிலைபேறு வலியவென் புன்முடிச்சாம் பூந்தச்
செஞ்சிலம் படி சூட்டினஞ்
சித்திர மயிலைக் குயிலை விருத்தகிரி வளரிளஞ்
சேயைப் புறங் காக்கவே.

(பொ.ரை)

உயர்ந்த அலைகள் கொண்டுள்ளப் பாற்கடலில் உள்ள சங்கு வயிறு நொந்து பெற்றெடுத்த முத்து எனவும் அதில் எழுகின்ற முழுமதிபோல ஒளிரும் வண்ணம் உள்ளது அன்னம்.

விலைமதிக்க முடியாத குதிரை வாகனத்தை செலுத்துகின்ற வெள்ளைத்தாமரையில் வீற்றிருக்கும் லட்சுமியை மணந்த நாராயணனின் உந்தித்தாமரையில் உதித்துள்ள நான்முகனைப் போற்றுவோம்.

கலைபொறிந்த மதி அமுதை உதிக்கவும் பாம்பு விஷத்தை வாயில் கக்கவும் சிவபெருமானின் கையிலுள்ள சிறுமான் ஒலிஎழுப்ப சிற்சபையில் நடனமாடும் சிவபெருமானின் துணைவியான திண்ணமான மனம், பொன் களை காலில் சிலம்பாகக் சூட்டியுள்ள அழகுமயிலை, குயிலை, திருமுதுகுன்றில் வளரும் இளம் குழந்தையை நான்முகன் காக்கவேண்டும். ⑥

## சப்த மாதர்கள்

7. நனைமலர் திசைமுகன் நாத் தோறடுத்தவள்
நசிகரி தோலைக்கபாய் என்றுடுத்தவள்
மத அவுணர் குலம் வீயப் படுத்தவள்
மலிகடன் ஈரழலாகக் கடுத்தவள்
கனபுவிதனை ஒரு கோடிட்டு எடுத்தவள்

கயிலையை இறையொடு மேகத் தடுத்தவள்
எரிபுரை வேல்கொடு காவற் கடுத்தவள்
எனும் இவர் எழுவர் தந்தாளைப் பழிச்சுதும்
கனைகுரல் உமிழனல் போலச் சினத்தெழு
கதுவிய அவுணக் குலாதிக்க தாருகன்
தனைநிகர் சூர்முதன் மாயக் கிரவுஞ்சமுந்
தலைகெடத் திசைதிசை ஓடச் செலுத்துவேல்
--------------
--------------
தனையனைத் தோளிட்டு உலாவிக் களித்திடு
தனிமுது கிரிவளர் தாயைப் புரக்கவே.

(பொ.ரை)

குளிர்ந்த மலர்களைக் கொண்டு நான்கு திசையும் காக்கும் பிராமி, நாசம் செய்யும் யானையின் தோலை மேல்சட்டையாக உடுத்த இந்திராணி, அசுரர் குலம் அழியச் செய்த மகேசுவரி, விருத்தோம்பலை நிறைவுடன் செய்த கௌமாரி, நிறைந்த இவ்வுலகை ஒரு கோடுஇட்டு எடுத்த நாராயணி, கயிலாய மலை சிவபெருமானோடு சத்த மேகம் வராமல் தடுத்தவள் வராகி, ஒளிபொருந்திய உலகை வேல்கொண்டு காவல் காத்துக் கொண்டிருப்பவள் காளி ஆக இவர் எழுவரை தந்தவனைப் போற்றிப் புகழ்வோம்.

ஓங்கிய குரல் அனல்போல் கோபத்தால் எழுகின்ற அரக்கர் குல ஆதிக்க தாருகன் காளியால் கொல்லப்பட்டான். தனக்கு நிகர் இல்லை என்ற சூரபத்மன் போன்றவர்களை முருகன் ஓட ஓட வேலாயுதத்தால் விரட்டினான். அப்படிப்பட்ட முருகனை தோளில் போட்டு உலாவி மகிழ்ச்சியாக இருக்கும் தனிப் பெருமையை உடைய முதுகுன்றத்தாயைப் பாதுகாப்பீர்களாக. ⑦

## காளி

8. பையரவின் உலகும் மண்ணுலகும் விண்ணுலகும் ஒரு
பகையுறாமற் காக்கவும்
பார்முழுது நாவினை விரித்துச் செஞ்சோரிதுளி
பார்விழாமற் சுவைத்துச்

சையம் என அசுரனை அடித்தலத்து ஏற்றிமுத்
தலைவேற் கரங் கொண்டவன்
தடமார்பு இடந்து கோளரியேறு உகைத்துவரு
தக்க சூரரி காக்கவே
துய்ய நீர்பூத்த முள்ளாரை பாசிடைக்கமலத்
தூவிதழ் அவிழ்ந்து பாயுந்
துதை நறவு நிறைவட்ட மலர்மனைக் குடிகொண்ட
தோகைமட வாரிருவருஞ்
செய்யவல் விடவிழிய தாகச் செயுந்தவச்
செவ்வி நோக்கிக் கடைக் கண்
செய்த பழமலையிடம் படரும் மரகதவணச்
செழியபூம் பைங் கொடியையே.

(பொ.ரை)

நாகலோகம், மண்ணுலகம், விண்ணுலகம் எல்லாம் பகையில்லாமல் காக்கவும், உலகம் முழுவதும் நாக்கினை நீட்டி ஒருதுளி இரத்தம் கூட கீழே விழாமல் தாங்கி சுவைத்தும், சையம் (மலை) எனும் அரக்கனை தாங்கி திரிசூலத்தை கையில் கொண்டிருப்பவளே, ஆண்சிங்கம் என்னும் சிம்ம வாகனத்தைக் கொண்டு உலாவரும் காளியே.

தூய்மையான நீரில் பாசிபடர்ந்து தாமரைமலர் இதழ் விரிந்திருக்கின்ற நிறைவான வட்ட வடிவான மலரில் குடிகொண்டிருக்கின்ற பெண்கள் இருவரும் நடுக்கம் உறும் கண்களை உடைய தவம் செய்கின்ற கடைக் கண்பார்வையுடைய பழமலையில் வாழும் மரகதவணசம் செழியும் பூங்கொடியைக் காக்க வேண்டும். (8)

## இந்திரன்

9. சீர்மேவு கற்பகத் தருநீழல் வைகிச்
சிறந்த வீரிரு கோட்டுமுச்
செவ்விய கடாம் பொழியும் வெண்கரிகடாவியிருள்
தின்னுமின் விடுபுயலினை
யேர்மேவு திசைதிசை துரத்திவாள் கொண்டு மலை

யிறகறுத்து எவ்வுலகையும்
மேவிதரும் அத்தெய்வம் அதுகொடு புரக்குமோர்
இந்திரன் அடித் துதிப்பாம்
நார்மேவு நதிமதி துரந்து இரவில் ஒருபெண்மனை
நாடித் தூதாய்ச் சென்றதும்
நாடிமெய்த் தொண்டு இயற்றிடும் இயற்பகைமனையை
நண்ணியதும் மதில் இலங்கைத்
தார்மேவு புய இராவணன் மனைவியார்க்கு இன்பு
தந்ததும் முனோர்ந்து நாளுந்
தளை அன்பு பூட்டிச் சிந்தைச் சிறைசெய் முதுகிரித்
தையலை அளிக்க வென்றே.

**(பொ.ரை)**

சிறப்புடைய கற்பக மர நிழலில் வீற்றிருந்து வீரமுடைய இருகொம்பும் மதம்பொழியும் வெள்ளையானை கொண்டு இருளை ஓட்டுகின்ற ஒளியும் ஓடுகின்ற புயலினைத்திசை தோறும் துரத்தி திரிகின்ற விந்தியமலையின் சிகர இறகை அறுத்து எல்லா உலகையும் காத்து வருகின்ற இந்திரன் திருவடிகளை வணங்குவோம்.

அன்பு பொருந்திய, நதியையும் மதியையும் மறைத்துவிட்டு ஒரு இரவில் சுந்தரமூர்த்திக்காக திருவாரூரில் பரவை நாச்சியார் மனைக்கு தூதாக சென்று ஊடலை தீர்த்தலும், விரும்பி திருத் தொண்டு செய்திடும் இயற்பகை நாயனார் வீடுசென்றதும், மதில்கள் சூழ்ந்த இலங்கையில் மாலை அணிந்திருக்கின்ற இராவணனின் மனைவி மண்டோதிரிக்கு அருள் கொடுத்ததும் முன்பு நினைத்து நாளும் அன்புச் சங்கிலியால் பூட்டி மனம் நிறைந்து சிறை செய்கின்ற பழமலையில் வாழ்கின்ற பெரியநாயகியை பாதுகாக்கவே. ⑨

## முப்பத்து தேவர்

10. கார்மல இருள்எனது உளமனை அகலக்
கதிர்விடு சிற்சுடரைக்
கதிர்விடும் இரசித வள்ளத்து அமுது
கரங்கொடு சென்றரசின்

சீர்நிழல் வதியுங் குமரற் கூட்டிச்
சின்மய ஒளிகாட்டுஞ்
சிற்பரை யைப் பழமலை வளர் இமயச்
செல்வியை அனுதினமும்
ஏர்கதிர் விடுபன்னிரு சூரியர் திசை
எண்மரும் இசைபோய
எண் வைரவரும் மருத்துவர் எழுவரும்
எண்மர் வசுக்களொடுந்
தார்மிலை உருத்திரர் பதினொரு வரும் ஒளிர்
சந்திரன் இந்திரனுந்
தகுமுப்பது முக்கோடி பல்தேவர்கள்
தகவொடு காத்திடவே.

**(பொ.ரை)**

கார்கால இருள் எனது உள்ளத்தில் அகல பிரகாசிக்கின்ற கதிர் ஒளிவிடுகின்ற பொற்கிண்ணத்தில் அமுதை கரத்தில் கொண்டு அரசமரத்தடியில் இருந்த குமாரதேவர்க்கு பெருமை சேர்த்து ஞான ஒளியைக்காட்டி, ஞான சக்தியைக் கொடுத்து பழமலையில் வீற்றிருக்கு மலைமகளை எப்போதும் ஒளிவீசிக் கொண்டிருக்கும் 12 சூரியர்கள். திசைகாவலர் எண்மர், காவல் தெய்வமான வைரவர் எட்டும், மருத்துவர் எழுவரும் (அச்சுவினி தேவர்), அட்டவசுக்களோடும் சிறந்த உருத்திரர் பதினெருவரும் சந்திரன் இந்திரன்முப்பதுமுக்கோடி தேவர்களும் உரிமையுடன் காத்திடவே. (10)

**காப்புப்பருவம் நிறைவுற்றது.**

# 2. செங்கீரைப் பருவம்

1. மதிதவழும் இமயத் திருத்தேவி யார்முன்னம்
ஆற்றுந் தவப்பெற் றியால்
மங்கலத் திருவிடை வருந்தாது உயிர்த்துமண
மஞ்சள் பொற் பொடி திமிர்ந்தே
துதிமலர் கரங்கொடு கணைக்காற் கிடத்திவெண்

சுரிமுகச் சங்கின் வாசந்
துன்னுங் குளிர்ந்த நன் னீராட்டி விழிசெவி
துணைத்தாள் கள்நீவி வாய்கூய்
அதிவேக முடன் உச்சி நீர்ஊதி மோந்துமேல்
ஆடைகொடு மெய்ஒற் றிப்பின்
அம்பொன்முலை மார்போடு அணைத்து நீறிட்டுநுதல்
அணிநிலப் பொட்டும் இட்டுத்
திதிபெறக் கொங்கையமுது ஊட்டவள ருங்குழலி
செங்கீரை ஆடி அருளே
திகழ்பழ மலைப்பதி செழிக்கவரும் என்னம்மை
செங்கீரை ஆடி அருளே.

**(பொ.ரை)** நிலவு தவழும் இமயமலையில் இருக்கும் உமாதேவியார் முன்னம் செய்த தவப்பயனால் மங்களகரமாக இடைவருந்தாமல் பிறந்த குழந்தைக்கு மணம் பொருந்திய மஞ்சள், பொன் பொடிகளைப் பூசி போற்றுகின்ற மலர்போன்ற கரத்தோடு தாயானவள் தன் கணைக்காலில் கிடத்தி எட்டு முகங் கொண்ட சங்கினால் மணம் நிறைந்த குளிர்ந்த நீரில் நன்னீராட்டினாள். பின் விழி, செவி, கால் போன்றவற்றைத் தடவி வாயைத் துடைத்து உச்சியில் உள்ள நீரை ஊதி, முகந்து பார்த்து, ஆடைகொண்டு உடம்பினை ஒற்றி எடுத்தாள். பின்பு மார்போடு அணைத்து, திருநீறிட்டு, நெற்றியில் மண்ணைத் தேய்த்து திலகமிட்டு சுகம்பெற தாய்ப்பால் ஊட்ட வளரும் குழந்தையே செங்கீரை அடியருளே. புகழ்பெற்ற பழமலை தலம் செழிக்க வந்துள்ள எங்கள் அம்மையே செங்கீரை ஆடியருளே. (11)

2. நந்தாத செல்வச் சிலம்பரை யன்மனையாட்டி
நாண் முகைத் தனத்தின் ஒர்கை
நாடிவரு டவும் ஒரு தனம்பிடித்து அமுதுண்டு
நமுவு பான் மடிநனைப்ப
வந்து ஆவலொடு சிற்றில் விளையாட நயமொழியின்
வாங்கிப் பொற் புறத்தாருவால்

வனைபாவை இடையேற்றி மாதவிப் பந்தரிடை
மல்கும்பி ணாக்குழு வொடும்
செந்தார்ப் பசுஞ்சிறைக் கிள்ளையை மணஞ்செய்து
தீங்கனி விருந்திட் டுப்பொற்
சீர்ச்சிவிகை ஏற்றிமணம் வருசெயற் றான்பெற்ற
சேற் கண்ணி நோக்க அவள் தன்
சிந்தாகு வந்தீர வந்தாடல் புரிசெல்வி
செங்கீரை யாடி யருளே
திகழ்பழ மலைப்பதி செழிக்கவரும் என்னம்மை
செங்கீரை ஆடி அருளே.

**(பொ.ரை)**

பெருகும் செல்வத்திற்குச் சொந்தமான முருகப் பெருமானின் தந்தையின் மனையாட்டி, குழந்தை பருவத்தில் பாலுண்டு, அமுதுண்டு, தாயாரின் மடிநனைத்து, ஆவலோடு சிற்றில் விளையாடி, நயமொழிகள் பேசி, அலங்கரித்த பொம்மைகளை இடையில் வைத்து, மல்லிகைப் பூபந்தலில் கூட்டமாக வேறுபெண் குழந்தைகளுடன் கிளிகளை வைத்து விளையாடி அவற்றிற்கு மணம் செய்து, தீங்கனிகளை விருந்திட்டு, அழகான சிவிகையில் ஏற்றி, திருமண ஊர்வலம் செய்து அவள்தன் மனக்கவலைத், தீரவந்தாடல் புரியும் தாயே செங்கீரை ஆடி அருளே. புகழ் பெற்ற பழமலை தலம் செழிக்க வந்துள்ள எங்கள் அம்மையே செங்கீரை ஆடியருளே. ⑫

3. காருலாம் புரிசைசூழ் மாடமலி கூடலின்
கட்பொலிபொன் மாலை வாசக்
கங்கைபுனல் கொண்டாட்டிப் பிறைநுதற் திருநீற்றுக்
காப்பீட்டுத் திலகம் இட்டுக்
கூருலாம் வேல்விழிக்கு அஞ்சனந் தீட்டி இரு
கொங்கைபால் நிறைய ஊட்டிக்
கோதறுநல் ஆடையனை மீதிட்டுச் சீராட்டு
கோதைக்கட் களிதூங்க நற்

சீருலாம் இருகரம் நிலத்து ஊன்றி ஓர்தாட்
சிலம்பறை மேனீட்டி யோர்
செம்பதக் கணைக்காற் கவிழ்த்தூன்றியுடனிமிரச்
சிரமேல் அசைந்தாடிடுஞ்
சேருலாம் அண்டசர அசரசிற் றுதர அன்னை
செங்கீரை ஆடி அருளே
திகழ்பழ மலைப்பதி செழிக்க வரும் என்னம்மை
செங்கீரை ஆடி அருளே.

**(பொ.ரை)** வேத தச்சனால் வடிவமைக்கப்பட்ட மதில்சூழ்ந்த மாட மாளிகையில் மாலை வாசனையுடைய கங்கை நீரில் நீராட்டி நெற்றியில் திருநீறு இட்டு, திலகம் இட்டு, கூர்மையான விழிக்கு கண்மையிட்டு, பாலூட்டி, குற்றமில்லாத ஆடைகளை அணிந்து சீராட்டி குழந்தையைத் தூங்க அழகு பொருந்திய இரண்டு கரங்களை நிலத்தில் ஊன்றி ஒரு காலை சிலம்பு ஒலிக்குமாறு மேல் நீட்டி செம்மையான கணைக்காலை ஊன்றி உடன் நிமிர்ந்து தலை மேல் தூக்கி அசைந்தாடிடும் போது எல்லா அண்ட சரா சரங்களும் ஆடுபடி தாயே செங்கீரை ஆடி அருளே. புகழ் பெற்ற பழமலை தலம் செழிக்க வந்துள்ள எங்கள் அம்மையே செங்கீரை ஆடியருளே. (13)

4. மருவீற் றாங்கமல மலர்வழிந் தொழுகுதேன்
வாரியொடு முத்த நதியின்
மல்கும் வெள் ளப்புனல் மடைக்கால் கிழித்தொழுக
வளர் செந்நெல் கதலி கமுகந்
தருவீற் றிடும்பல வளஞ்செறி விருத்தகிரி
தங்குபூங் காவின் விண்ணோர்
தஞ்சிறு பிணாக்களோடு சிறுவீடு கட்டிச்சிறு
சாதஞ் சமைத்து மலர்மேல்

திருவீற் றிடுங்கடல் பிறந்த மதிக் கடவுளைச்
சிறிய எரு விட்டி றைஞ்சிச்
செங்கை மலர் கூய்ப்பரவி அமுதுண்டு உளந்தேக்கிச்
சிறுகை ✿ தத்தாங்கி கொட்டிச்
செருநீக்கி மகிழ்வோடு விளையாடும் ஒருகுழவி
செங்கீரை ஆடி அருளே
திகழ்பழ மலைப்பதி செழிக்க வரும் என்னம்மை
செங்கீரை ஆடி அருளே.

**(பொ.ரை)** வாசனை பொருந்திய தாமரைமலர், தேன், தானியங்கள் போன்றவற்றை கொண்டுவரும் திருமணி முத்தாற்றின் வெள்ளநீரை வாய்க்கால்கள் வழியாக நெல், வாழை, கமுகு போன்ற வற்றிற்குப் பயன்படுத்தி வளஞ்சேர்த்துக் கொண்டிருக்கும் பழுமலையில் உள்ள பூங்காவில் வானோர்கள் தங்கி தம் பெண்களோடு சிறுவீடு கட்டி சமையல் செய்து, கடலில் பிறந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமித் தாயை சிறிது அஞ்சலி செய்து, சிவந்த மலர்களால் கூப்பி, பரவி அமுதுண்டு உள்ளத்தே தேக்கி, சிறுமைகளால் தத்தாங்கி கொட்டி அஞ்சம் தவிர்த்து மகிழ்வோடு விளையாடும் தாயே செங்கீரை ஆடி அருளே. புகழ்பெற்ற பழமலை தலம் செழிக்க வந்துள்ள எங்கள் அம்மையே செங்கீரை ஆடி அருளே. (14)

5. முள்ளறாத் தண்கொடிப் பாசடைச் செவ்விதழ்கொள்
முளரிமா ளிகையும் மதுரம்
முதிரு நவ ரசமொழுகு மறைகிடந்தனு தினம்
ஒலித்திடு செந்நாவுந் துளிக்
கள்ளறாத் தருநீழல் உறையுஞ் சுராதிபர்கள்
கைதொழுது வேட்ட அடையுங்
கயிலை வரை யுஞ்சில் லைனச்சிமைய மொய்த்திடு
கவின் கொளிமை யத்தே வியார்க்கு

---

✿ தத்தாங்கி-மகளிர் விளையாட்டு

(பொ.ரை)

தாமரை போன்ற முகத்தின், மீன்போன்ற இரண்டு கண்களும் ஒய்யாரமாக அசைந்தாட, கூந்தலின் உச்சியிலுள்ள ஆபரணம் முன்பு கழிந்தாட, இந்திரனுடைய பெண்ணுக்கு நிகரான இரண்டு புருவமும் மகிழ்ச்சியில் நிமிர்ந்தாட, மணி ஒளிவீசும் நுதலில் அணிந்துள்ள அணிகலன்கள் ஒன்றோடு ஒன்று மன்னி அசைந்தாட, சுகமாக அல்லிபோன்ற சிவந்த வாயின் பற்களில் முத்தொளி தோன்றி விரிந்தாட, பரிசுத்தமான மலர்களில் வண்டுகள் மொய்த்து துள்ளி அசைந்து ஆட, அண்டங்களை எல்லாம் ஈன்றவளனா தாயே செங்கீரை ஆடுக. அருள்மிகு பழுமலையான் இடதுபுறம் உறைகின்ற ஞான தாயே ஆடுக செங்கீரை. ⑯

7.தண்டை சதங்கை சிலம்பு புலம்பித் தகைந்து விரிந்தாடத்
தருநிக ருங்கை வளைவைத் தாற்றிய தன்மணி ஒளியாடக்
கெண்டைக ணோடிச் செவிபாற் குமிழிடு கிளர்முத்து ஒளியாட
கிஞ்சுக வாயிதழ் எமுநறை புனலொடு கெழு புன்னகையாடக்
கொண்டை மென் மாலை அவிழ்ந்து நரந்தக்குஞ்சி விரிந்தாடக்
கோதறும் மரகத மேனி ததும்புங் கொழுவிய வெயிலாட
அண்டையின் நின்ற அரனாடல் களித்தவள் ஆடுக செங்கீரை
அருள்பழ மலையரன் இடம்உறை வித்தகி ஆடுக செங்கீரை.

(பொ.ரை)

தண்டை, கொலுசு, சிலம்பு ஆகியவை ஒலித்து அழகாக விரிந்து ஆட, சிறப்பான, ஒப்பில்லாத கை வளையல்களில் உள்ள குளிர்ச்சி பொருந்திய மணிகள் ஒளிவீசி ஆட, கிளிபோன்ற வாயில் வாசனை பொருந்திய நீரோடு சிரிப்பொலி கேட்க, கூந்தலில் உள்ள மாலை அவிழ்ந்து வாசனை வீச கூந்தல் விரிந்த ஆட, குற்றமில்லாத மரகத மேனி ஒளி வீசிட, அருகில் நின்று சிவன் ஆடலை கண்டு களிக்கின்ற தாயே செங்கீரை ஆடுக. அருள்மிகு பழமலையான் இடபுறம் வீற்றிருக்கும் ஞானத்தாயே ஆடுக செங்கீரை. ⑰

8.பக்கம் அனைத்துகில் வெள்ளிட்டு உதையாப் பதமலர் கன்றாமே
பருகுறு தேறற் சுவைப் பெரு விரலிற் படுமண் எண்ணாமே
கக்கிடு கோழைக் குரல்மிக விம்மிக் கம்மிப் போகாமே
கவின் முத்தென நுண் குளிமுத்திருவிழிக் கட்கடை சிந்தாமே
தொக்க பசுங்கதிர் மரகத மேனித் துகள் மண் அணையாமே
துன்னிடு பவர் கர வணை மிசை தாவித் துள்ளிப் போகாமே
அக்கர வப்பணி யற்கிரு கண்மணி ஆடுக செங்கீரை
அருள்பழ மலையரன் இடம்உறை வித்தகி ஆடுக செங்கீரை.

(பொ.ரை) .

அருகில் அனைத்து உள்ள ஆடையைப் புறங்கொடுத்து மாறுபாடு இல்லாத மிருதுவான மலர்கடுக்காமல் மலை திட்டுகளில் உள்ள தேனாடையின் சுவை போன்று பெரு விரலில் இருக்கும் மண் என்று எண்ணாதே. அந்த உமிழ்நீரை கக்கிடு. அதன் காரணமரக குரல் விம்மி குறைந்து போகாது இருக்க, அழகான முத்தென உன் விழிகள் இருக்கும் கடல் முத்தை சிந்தாதே. பசுங்கதிர்வீசும் மரகதமேனியில் மண் துகள்கள் சேராமல் நெருங்கி வருபவர் கை அணைந்து, தாவி துள்ளிப் போகாமல், பிரணவமந்திரம் விடுபடாமல் கண்மணித் தாயே செங்கீரை ஆடுக. அருள்மிகு பழமலையான் இடதுபுறம் வீற்றிருக்கின்ற வித்தைகளுக்கெல்லாம் அதிபதியே செங்கீரை ஆடுக. (18)

## வேறு

9.அடல்கெழு திசைவரை பொடிபட்டு எழுதுகள் அசுரர்கள் விழியேற
அதிச்சூரன் மகிடங் கடவிடு நமனுளம் அஞ்சிப் பயமேறப்
படவர வுடனெளி உறமண் மகளுறு பாரச் சுமைபாறப்
படிறவு ணக்குல மகளிர் வயிற்றிடை பற்றித்தீயேற
மிடலறும் அமரர்கள் துயர்தீரத்ரெனு மெல்லுரை வாயேற
மிளர் கொக் கிருபிள வாகச் சுடர்விடு மின்வேல் கையேறத்
திடமயில் கடவும்ஓர் மதலை உதவினள் செங்கோ செங்கீரை
திகழ்பழ மலையிடை வளருமோர் இளமயில் செங்கோ செங்கீரை.

(பொ.ரை) வலிமையுடன் எழுகின்ற எட்டுத்திக்கு மலையை பொடி ஆக்குகின்ற போது எழுகின்ற துகள்கள் அசுரர்களின் கண்களில்

# 3. தாலப் பருவம்

1. கன்னற் சிலைவேள் வசந்தனொடு
   கடவுஞ் சிறுகால் எழுந்து அசையக்
   கனலின் சிகைபோற் றளிர்த்திடுதீங்
   கன்னி மாவி னிழற்றுயில் செய்
   பின்னர் கயவாய்த் திகிரியெனப்
   பிறங்கும் மருப்புப் புனிற்றெருமை
   பிரியாப் பசும்புற் கறிக்கறியாப்
   பேதை இளங்கன் றுளத்துஉன்னிப்
   பொன்நற் குடமா முலைநின்று
   பொழிபால் அருவி உவட்டுஎறிந்து
   புகுத வளர்செந் நெற்கழனிப்
   பூந்தா மரையிற் கண்வளரும்
   அன்னஞ் சிலம்பும் விருத்தகிரிக்கு
   அரசே தாலோ தாலேலோ
   அண்டம் அனைத்தும் அளித்திடும்பெண்
   அமுதே தாலோ தாலேலோ.

(பொ.ரை)

மன்மதன் கரும்பு வில்லைக்கொண்டு தென்னங் காற்று வீசும் வழியே செல்லும் போது மெல்லியக் காற்று வீச அதனால் கரும்பின் நுனியானது அசைய. இளம்மாவின் நிழலில் உறங்கும் கருங்குருவிகள் ஒலிசெய்கின்றன. எருமைக் கன்றுகள் பசுமையான புற்களைக் கடிக்கத் தெரியாமல் தாய் எருமையிடம் நிற்க, அது கன்றின் வாய்ப்பக்கம் மடியைக் காட்டி நின்றவுடன் அருவிப்போல பாலைச்சொரிந்து கொண்டு நிற்கும். நெல் வயல் கழனிகள், அங்கு பூத்துக் குலுங்கும் தாமரைகள் பூவிரியச் செய்கின்றன. அப்போது அன்னப்பறவைகள் ஒலி எழுப்பிக் கொண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் தலைவியான பெரிய நாயகியே தாலோ தாலேலோ. உலக அனைத்தையும் காத்துக் கொண்டிருக்கும் பெண் அமுதம் போன்ற பெரிய நாயகியே தாலோ தாலேலோ. (21)

4. செறிந்து நீண்டு கறுத்துநெய்த்துச்
சேரும் மணப்பூ மகரந்தம்
திமிர்ந்து நறிய நெய்தோய்ந்து
திரியும் அறுகாற் குழன்மடவார்
பிறிந்து குடையும் நறுமஞ்சட்
பெருநீர் பாய்ந்து செழித்தசெந்நெற்
பிறங்கும் பருதிக் கயர்வொழியப்
பெருங்கால் ஓச்சும் பூந்தருத்தேன்
எறிந்து மணிமுத் தலைகொழிக்கும்
இணையில் முத்தா நதிவளஞ்சேர்
எழிலார் நகரில் அனுதினமும்
ஏத்தித் துதிக்கும் என்சிறுமை
அறிந்து புரக்கும் விருத்தகிரிக்கு
அரசே தாலோ தாலேலோ
அண்டம் அனைத்தும் அளித்திடும்பெண்
அமுதே தாலோ தாலேலோ.

(பொ.ரை)

தேனீக்கள், நெருங்கி நீண்டு கறுத்து பளப்பளப்பும் சேர்ந்து இருக்கும் மணம் பொருந்திய பூக்களில் உள்ள மகரந்தம் கலந்து இருக்கின்ற தேனை எடுத்துக் கொண்டும் திரியும். மணம் பொருந்திய நல்ல மஞ்சள் நிலத்துக்கு நீர் பாய்த்து, செழித்த நெற்பயிர்கள் ஒலிக்கும். சூரியன் அங்குள்ள இருளை மாற்றும். பூக்கள் தன் உள்வைத்திருக்கும் தேனை மணிமுத்தாற்றில் சொரியும். இப்படி முத்திதரும் முத்தாநதி வளம் சேர்க்கும் அழகிய முதுகுன்றில் எல்லா நாட்களும் போற்றியும் துதித்தும் இருக்கும் என் செயலை அறிந்து காத்துக் கொண்டிருக்கும் திருமுதுகுன்றத்து அரசி என்னும் பெரியநாயகியே தாலோ தலேலோ. உலகம் அனைத்தையும் காத்துக் கொண்டிருக்கின்ற பெண் அமுதம் என்னும் பெரிய நாயகியே தாலோ தாலேலோ.

(24)

5. ஊறும் பாற்குன்று இரண்டுசுமந்து
ஒசியும் நறும்பூங் கொம்பினையார்
ஒதி முரலுஞ் சுரும்புகள்பூ
உதிர்க்குந் தாது விண்ணதியைச்
சேறு செய்யும் பொதும்பர் தவழ்
திங்கட் கலையை முசுக்கலைபாய்
செறிகம் பலைக்கங் கொதுங்கிவயற்
செந்நெற் சூட்டின மேய்ந்துதிரிந்து
ஏறு முகிற்போத் தெருமையோடு
இழுத்துப் பிணையல் இட்டுஅடிக்கும்
எறுழ்கார் மள்ளர் இடிக்குரல்கேட்டு
இரிந்தோட் டெடுக்க வயல்மலர்த்தேன்
ஆறு தடுக்கும் விருத்தகிரிக்கு
அரசே தாலோ தாலேலோ
அண்டம் அனைத்தும் அளித்திடும்பெண்
அமுதே தாலோ தாலேலோ.

(பொ.ரை)

பால் ஊறும் கொங்கைகள் இரண்டு சுமந்து அசையும் மணம் பொருந்திய பூக்களை அணியும் பூங்கொடியார் பாடுவர். ஒலிக்கின்ற வண்டுகள் பூக்களில் உள்ள தாதுக்களை தெய்வநதியானது மணிமுத்தாற்றில் உதிர்க்கும். அதனால் சேறாகும். இளமரச் சோலையில் தவழ்கின்ற ஆண் குரங்குகள் சண்டையிடும். வயல்களில் உள்ள செந்நெல் சூட்டின் மேய்ந்து திரிந்த எருமைகளைக் கட்டி பிணையல் இட்டு அடிக்கும் உழவர்களின் குரல் கார்கால இடிக்குரல் போல இருக்கும். இதனைக் கேட்டு வயல்களில் உள்ள தேன் ஆற்றில் விழுவதால் மணிமுத்தாற்றின் தண்ணீர் தடைபடும். இப்படி பட்ட மணிமுத்தாறு வலம் வரும் திரு முதுகுன்றத்தின் அரசியே பெரியநாயகியே தாலோ தாலேலோ. உலகம் அனைத்தையும் காத்துக் கொண்டிருக்கின்ற பெண் அமுதம் போன்ற பெரியநாயகியே தாலோ தாலேலோ. (25)

## வேறு

6.எழில்வெள் ளிக்கிரி அமர்பவளக்கிரி இடைபடர் பைங்கொடியே
எவ்வுயி ருஞ்செய் தவக்குறை யறவரும் இமய மடப்பிடியே
செழிமலர் அடிநினை பவர்மல இருள்தெறு சிற்சுடர் தினமணியே
செம்மல ரயனரி கைம்மலர் குவிகழல் செலவிபொள் ளாமணியே
வழிசுவை அமுதுகு மதியே நவரசம் வதிமது ரக்கனியே
வண்டமி ழோர்புகழ் கொண்ட பதாம்புய வஞ்சி இளங்கொடியே
தழியுள மகிழ்செயு முதுகிரி மயிலே தாலோ தாலேலோ
தருணத்து உதவுநல் அமுதக் கடலே தாலோ தாலேலோ.

**(பொ.ரை)** அழகுபொருந்திய வெள்ளியங்கிரி என்னும் கைலாய மலையில் வீற்றிருக்கும் சிவபெருமானே, துகில் கொடி போன்ற இடையை உடைய பச்சைக் கொடி போன்ற அம்பிகையே, எல்லா உயிர்களும் செய்யும் தவக்குறையை நீக்க வந்த இமையமலையின் பெண் யானை போன்றவளே, வளமான மலர் அடியை நினைப்பவர்கள் மலமான இருள் அச்சத்தை நீக்கும் சுடர் போன்ற சூரியனே! செம்மையான அரிஅயன் கைமலரே, ஒழுங்கான கழல் அணிந்த இசையோடு பாடுகின்ற சுயமானமணியே, வருகின்ற சுவை அமுதே, சந்திரனே, ஒன்பது சுவையும் தங்கும் இடமாகக் கொண்டவளே, இனிக்கும் கனியே, தூய தமிழ் மக்கள் புகழ்கின்ற பக்குவப்பட்ட தோள்களை உடைய கொடி போன்ற இளங்கொடியே, தழுவும் மனம் மகிழச் செய்யும் திருமுதுகுன்றத்தின் மயில்போன்ற பெரியநாயகியே தாலோ தாலேலோ. தக்கசமயத்தில் உதவக் கூடிய நல்ல அமுதக் கடல்போன்ற பெரியநாயகியே தாலோ தாலேலோ.

7.உடல் நடுக்குற்று உருகுவர் இதயத்து ஒளிரும் விளக்கொளியே (26)
ஒப்பில் பரஞ்சுட ருக்கிதம் உதவுறு முத்தம நற்றுணையே
சுடர்விடு மணிகள் சுமந்து துவண்டுஅசை சுகுணப் பொற்கொடியே
துய்யர் அகத்தும் என் ஐய ரகத்துந் துனும்அமு தச்சுவையே
வடவரை மகரத் துவசம் நிறுத்திய வள்ளற் கொருசேயே
வசைசொற் பழகிய எனைநற் றமிழ்சொல வைத்த அருட்டாயே
தடமுலை தழுவக் குழைமுது கிரிவளர் தாலோ தாலேலோ
தருணத்து உதவுறும் அமுதக் கடலே தாலே தாலேலோ.

(பொ.ரை)

உடலில் துன்பம், நடுக்கம் கொண்டு தன்னை நினைத்து உருகுபவர்கள் இதயத்தில் விளங்குகின்ற விளக்கொளியே. ஒப்பில்லாத பரம்பொருளே. இதம்செய்ய உதவும் சத்தியாகி உடனாகிய பெண்களின் நல்ல துணையே. ஒளிவீசுகின்ற மணிகளை அணிந்து அசைகின்ற நற்குணப் பெண்கொடியே, தூய்மையானவர்கள் அகத்தும் எங்களது சிவபெருமானின் உள்ளத்தும் நெருங்கி இருக்கும் அமுதச் சுவையே. இமயம் வரை மீன்கொடி நாட்டிய அரசனின் (பாண்டிய மன்னனின்) குழந்தையே, இகழ்ச்சிச் சொல்லையே பேசிவரும் என்னை நற்றமிழ் சொல்லவைத்த அருள்தாயே. பெரியகொங்கைகள் தழுவுகின்ற தளிர்நிறைந்த முதுகுன்றத்தில் இருக்கும் தாயே பெரியநாயகியே தாலோ தாலேலோ. தக்க நேரத்தில் உதவுகின்ற அமுதக்கடல் போன்றவளே! பெரிய நாயகியே தாலோ தாலேலோ. (27)

8.அண்டர்க்கு அதிபதி வெண்கரி பிளிறிட அகநாண் அதின்மூழ்க
அம்புயல் ஏறி அடர்த்து எதிர் சென்றே அமரிற் றமரினொடு
மண்டெண் டிசையின் தலைவரும் அனிகமும் மலையிற் சிறகரியும்
வச்ரப் படைகொடு பிறகிட் டுடைவது கண்டு முகங்குளிராச்
சண்டற் புரைஅவு ணக்குலம் ஒழியத் தடவட வரைநெரியத்
தகுவியர் வயிறெரி யக்கடல் சுவறத் தனிவேற் படைதிரியாத்
தண்டத் தமர்புரி தன்னயனை அருள்பவள் தாலோ தாலேலோ
தருணத்து உதவும் அமுதக்கடலே தாலோ தாலேலோ.

(பொ.ரை)

தேவர்களுக்கெல்லாம் தலைவனான தேவேந்திரனின் வெள்ளையானை ஒலி எழுப்பிட, வில்நாண் அதில் மூழ்க, எதிர்சென்று போரில் உறவினர்களோடு, எண்திசை காவலரும் படைகளும் வச்ரப்படைகொண்டு செல்ல, பின்வாங்குவது கண்டு வேகமாக ஓடும் அவுணர்குலம் அழிய அசுரமகளிர்வயிறு எரிய, கடல்வற்றிப்போக தனியாக வேற்படைக்கொண்டு

தேவலோகத்துப் போரை நடத்திய முருகப்பெருமானைக் கொடுத்தருளியவளே பெரியநாயகியே தாலோ தாலேலோ. தக்க நேரத்தில் உதவிசெய்யும் அமுதக்கடல் போன்றவளே! பெரியநாயகியே! தாலோ! தாலேலோ . (28)

## வேறு

9. பாவும் பல்லுயிர் பாபக் கடல்நீர் தோயாமே
    பற்றறும் முத்தர்கள் மீண்டு கருக்குழி சேராமே
தாவுந் தருமக் கொடியுல கிற்றலை சாயாமே
    தகுமறை தந்திர விதிவழி யும்பாழ் போகாமே
சேவுற் றிடுபவர் அடிநினை செந்நெறி சோராமே
    செம்மணி நீறு திகழ்ந்துஉலகு எங்கணும் மாறாமே
மேவுந் திருமுது கிரிமயில் தாலோ தாலேலோ
    மெய்த்தவர் நத்திடும் உத்தமி தாலோ தாலேலோ.

**(பொ.ரை)**

எல்லா உயிர்களும் குடும்பசாகரம் என்னும் பாசத் தளையில் தோயாமல் மீண்டும் பாவக் கடலில் வீழாமலும் பற்றற்ற சீவன் முத்தர்களும் மீண்டும் கருக்குழியில் வீழாமலும் (பிறவாமலும்) உயர்ந்த தருமம் செய்கின்ற இந்த உலகில் சாயாமல், வேத ஆகமங்கள் கூறும் நெறியில் தவறாமல், உயர்ந்த இடபவாகனராகிய சிவபெருமான் திருவடி நினைவு என்றும் உத்திராக்கம், திருநீறு அணிந்து மறவாமல், இந்த உலகில் வாழ்ந்து வருகின்ற திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியுள்ள மயில்போன்ற பெரியநாயகியே தாலோ! தாலேலோ! மெய்த்தவர்களிடம் அன்பு செலுத்திவரும் உத்தமியே பெரியநாயகியே! தாலோ! தாலேலோ. (29)

## வேறு

10. தடவற வத்தனை துயில்செய் முகுந்தன் தங்காய் தாலேலோ
    தசைகள் உரித்தவன் நசைகெட அரனுடற் பங்காய் தாலேலோ
நடமிடு தற்பரன் உளநளி னத்தமர் நங்காய் தாலேலோ
    நாரதனுக்குளழிற் பெண்ணுருத் தந்திடு நாயகி தாலேலோ

படவர வைச்சிறு விரன்மோ திரமாய்ப் பற்றினள் தாலேலோ
பைங்கர கமலத்து ஒளிர்திரி சூலப் படையாய் தாலேலோ
மடன்மலர் மகளிரை விழியென முகமலர் வைத்தவள் தாலேலோ
மதிதவழ் முதுகிரி வளர்சஞ் சிவியே தாலோ தாலேலோ.

**(பொ.ரை)**

பாம்புமேல் பள்ளிகொண்டிருக்கின்ற திருமால் தங்கையே தாலேலோ. பிருங்கி முனிவர்கள் செய்த குற்றம் நீங்க சிவனின் உடல்பாதி கொண்டவளே தாலேலோ. நடனமாடுகின்ற உலகின் தலைவன் (சிவன்) உள்ளத்தாமரையில் அமர்ந்தவளே தாலேலோ. நாரதனுக்கு அழகுபொருந்திய பெண்வடிவத்தைக் கொடுத்த நாயகியே தாலேலோ. சிறுபாம்பை பிடித்து தன் சிறு விரலில் மோதிரமாக அணிந்திருக்கும் அம்மையே தாலேலோ. அழகியத்தாமரை மலர் போன்ற கையும் ஒளிவீசுகின்ற சூலப்படையை உடையவளே தாலேலோ. அறியாமையில் இருக்கும் மகளீரை விழித்தெழும்படி முகத்தை மலரச் செய்தவளே தாலேலோ. சந்திரன் தவழ்கின்ற திருமுதுகுன்றத்தில் உயர்தரும் சஞ்சீவியே, பெரியநாயகியே தாலோ தாலேலோ. (30)

**தலாப் பருவம் நிறைவுற்றது.**

# 4. சப்பாணிப் பருவம்

1. தேனூற் றரும்புவாய் விண்டலர் பொதும்பரிற்
செழியசெந் தளிர்கள் கொய்துஞ்
செஞ்சிறு பிணாக்களொடு மட்காற் கலம்பெய்து
சிற்றில்விளை யாட்டு அயர்ந்தும்
வானூற்று புயன்மகிழ் மயிற்குஞ் சனக்குஞ்சு
வகைவகைய கிளி வளர்த்தும்
வண்பூவை யொடுபேசி வாய்முத்தம் இட்டும்ஒளி
வளர்பைங் கழங்காடியுங்
கானூற்று தொடிவிரவு காந்தண்மலர் கைக்கொண்டு
கண்பொத்தி விளையாடியும்
கந்தமலி நெட்டிதழ் அவிழ்க்கும்வெண் டாமரைக்

கலைமகளின் இருகைமாறித்
தானேற்று பம்பைசுற் றிடுமலர்க் கைகூப்பிச்
சப்பாணி கொட்டி அருளே
தண்முத்த நதிசூழ்ந்த முதுகிரிப் பெண்ணரசி
சப்பாணி கொட்டி அருளே.

**(பொ.ரை)** மலைச்சாரிவில் தேனுடன் அரும்புவாய் வெளிப்படுகின்ற செழிப்பான செந்தளிர்களைப் பறித்தும் சிறுபெண்களோடு மான் மரக்கலம் செய்து விளையாடியும் சிற்றில் விளையாடி சோர்ந்தும் மழைபுயல் இவற்றால் மகிழும் மயில்குஞ்சு, அன்னக்குஞ்சு இவைதவிர வகைவகையான கிளிகளை வளர்த்தும் குயில்களோடு பேசி முத்தம் கொடுத்தும் பெண்களோடு கழங்காடியும் காட்டில் உள்ளக் காந்தள் மலர்களைக் கைக்கொண்டும் கண்பொத்தி விளையாடியும் வாசனை மிகுந்த மலர்பறித்தும் கலைமகளின் வெண்தாமரையை இருகைகளிலும் மாறிமாறி வைத்து, பறை ஒலி எழுப்பி மலர்போன்ற கைகளுடன் வணங்கி சப்பாணி கொட்டியருளுக. குளிர்ச்சி பொருந்திய மணிமுத்தாறு சூழ்ந்த திருமுதுகுன்றில் எழுந்தருளியுள்ள பெரியநாயகியே என்னும் பெண் அரசியே சப்பாணி கொட்டி அருளுக. (31)

2. ஐந்தொழிலும் ஐஞ்சத்தி யாற்பிரமன் முதலான
ஐவர்க்கும் எண்ணளவைகாட்டு
ஐவிரல் படைத்தகை, குறிப்பிட் டதைத்தெளிய
ஆற்றிஅறி வித்திடுங்கை,
பைந்தழைய அரசடியிற் குமரனுக்கு அதிமதுரப்
பால்வாய் நெரித்தூட்டுகை,
பரமனைக் கச்சியின் முலைச்சுவ டுறத்தழுவு
பங்கயச் செங்கை அவராற்
றந்தநெற் சிற்றளவை இருநாழி யால்அறந்
தனை எண்நான் கும்புரிகை,மேல்
தமியனையும் நோக்கிநீ அஞ்சலென்று இடுகை, ஒளி
தங்குமணி கங்கணக்கை,
சந்தமக ரந்தநறை கொட்டுமலர் கொய்கையாற்

சப்பாணி கொட்டியருளே
தண்முத்த நதிசூழ்ந்த முதுகிரிப் பெண்ணரசி
சப்பாணி கொட்டியருளே.

(பொ.ரை)

ஐந்துதொழில் ஐந்து சத்தியால் பிரமன் முதலான ஐவர்க்கும் எண்ணளவைக் குறிக்கும் ஐந்து விரல்களைப் படைத்தகை. குறிப்பிட்ட செய்திகளைத் தெளிவாக ஆற்றி அறிவித்திடும்பகை. திருமுதுகுன்றத்தில் திருக்கோயிலின் கிழக்குபக்கம் இருந்த பசுமையான தளைகள் நிறைந்த அரசமரத்தடியில் குமார தேவர்க்குச்சுவை நிறைந்த பாலை ஊட்டியக்கை. காஞ்சிபுரத்தில் தவம் இருந்து ஏகம்பரநாதரை கண்டு நீ அஞ்சல் என்றும் அபயம் கூறியகை. ஒளிபொருந்திய கங்கணம் கட்டியகை. மணம் பரப்பும் மகரந்தம் கொட்டும் மலர்கள் பறித்து சிவபூசை செய்த கையால் சப்பாணிகொட்டியருளுக. குளிர்ச்சிபொருந்திய மணிமுத்தாறு சூழ்ந்த திருமுதுக்குன்றில் எழுந்தருளும் பெண்ணரசி போன்ற பெரியநாயகியே சப்பாணி கொட்டி அருளுக. (32)

3. சேலையலை யேற்றுமொரு வேலையிடை ஆலிலையிற்
செங்கண்வளர் புயலமார்பனைச்
சேர்திருவும், நான்மறைக ளோதிடு மறைக்கிழவர்
செந்நா மணிப்பீடம்வாழ்
வேலையலை செய்விழித் திருவாணி இருபுறமும்
மேவிஜம் பான்முடித்து,
விழுமலர் புனைந்துநுதல் கத்தூரி சவ்வாது
விரவிநல் திலதம் இட்டுக்
காலைமலர் குவளையிரு கட்குஅஞ்சனந் தீட்டிக்
கதிர்செய்மணி மாலைபலவுங்
கவினுடல் பெறச்சாத்தி மணவறையி லழன்முனாக்
கரகநீர் விடுதந்தையார்
சாலவாழ்த் தித்தரஎம் மையர்தொட் டிடுகையாற்
சப்பாணி கொட்டி அருளே

தண்முத்த நதிசூழ்ந்த முதுகிரிப் பெண்ணரசி
சப்பாணி கொட்டி அருளே.

**(பொ.ரை)**

அலைவீசிக் கொண்டிருக்கும் கடலில் ஆலிலையில் கண்வளரும் கார்மேக மேனியனைச் சேர்ந்திருக்கும் இலக்குமியும் நான்கு மறைகளை ஓதும் வேதங்களின் தலைவரும் பிரம்மாவும் நாவுக்கு அரசியாக வாழ்நாள் முழுவதும் வேலையாக விழித்திருக்கும் நாமகள் இருபுறமும் இருக்க தேவியின் கூந்தலில் சிறந்த மலர்களை அணிந்து, நெற்றியில் கத்தூரி சவ்வாது கலந்த நல்ல திலகம் இட்டு, காலைமலர் போன்ற குவளை வடிவமான கண்களுக்கு மைதீட்டி, ஒளிபொருந்திய மணிமாலைகள் பல கரக நீர்வார்த்து புகழ்பெற வாழ்த்திட அவரைப்பற்றிய கையால் சப்பாணி கொட்டியருக. குளிர்ச்சிபொருந்திய மணிமுத்தாறு சூழ்ந்த திருமுதுகுன்றில் எழுந்தருளும் பெண்ணரசி போன்ற பெரியநாயகியே சப்பாணி கொட்டியருளுக. (33)

4. போராட்டும் அசுரருடல் தசைமென்று நிணமுளை
போழுந்தெடுத் துத்தின்றுகைப்
புட்டுநக் கிக்கக்கி விக்கிபுண் ணீர்மாந்திப்
புளிவாய் குதட்டும் வடிவேற்
பாராட்டு குழவியைக் கணைக்காற் குளிப்பாட்டிப்
பசிதமிட்டு உச்சிமோந்து
பாற்கொங்கை சங்கிட்டுக் குவியாய் நெரித்தூட்டிப்
பைம்பொற் குறங்கினேற்றிப்
பேராட்டி காலசைத்துப் பாட்டு இசைத்திட்டுப்
பிரியமொடு கண்வளர்த்துப்
பெய்துகில் அணைமணித் தொட்டிலிடை யிட்டுப்
பிணித்தபொன் வடமசைத்துத்
தாராட்டு கதலிகமு கதுநாட்டி ஆட்டுங்கை
சப்பாணி கொட்டியருளே

தண்முத்த நதிசூழ்ந்த முதுகிரிப் பெண்ணரசி
சப்பாணி கொட்டியருளே.

**(பொ.ரை)**

போர்செய்கின்ற அசுரர்கள் உடல்களின் தசைகளைப் பிரித்து தின்று இரத்தத்தை மாந்திருக்கும் பாலகாந்தனாகிய எல்லோரும் புகழ்கின்ற குழந்தையைக் கணைக்காலில் வைத்து குளிப்பாட்டி, நீறுஇட்டு, உச்சிமோந்து, பாலை சங்கினால் வாயில்நெரித்து ஊட்டி, தொடையின் மேல்கிடத்தி, நாமங்கள் கூறி, காலை அசைத்து, இசையோடு பாட்டுப்பாடி, அன்போடு தூங்க வைத்து விரித்த துணிமெத்தையான மணித்தொட்டிலிட்டு, பொன்னாலான கயிறை அசைத்து தாலாட்டுபாடி, கதலி, கமுகம் நாட்டி ஆட்டுகின்ற கையை உடையவளே சப்பாணி கொட்டியருளுக. குளிர்ச்சி பொருந்திய மணி முத்தாறு சூழ்ந்த திருமுதுகுன்றில் எழுந்தருளும் பெண்ணரசி போன்ற பெரியநாயகியே சப்பாணி கொட்டியருளுக. (34)

5. கங்கோடு பொரும்அலை கடற்றானை சுற்றுபுவி
காவலர்கண் முன்றில் தூர்க்குங்
கப்பணப் பொற்குப்பை யோடுந் திசைத்தலைவர்
கதிர்மணி முடித்தாமமுந்
தங்கோசை யோடவைகள் தலைமயங் கிடவொற்றைச்
சக்கரம் உருட்டி உலவுந்
தகைப்பரிதி வெயில்விடும் அனுகுலபொன் னுலகரவு
தங்குலகம் எங்கும் அஞ்ச
வெங்கோப மறவாணை யாழிகட வித்திக்கு
விசையஞ்செய் தெங்கோனக
வெள்ளிவே தண்டத்து மேறித் துஜங்கட்டி
வெம்முரச மார்த்து வெற்றிச்
சங்கோல மிடஎழிற் செங்கோல் பிடித்தகை
சப்பாணி கொட்டி அருளே
தண்முத்த நதிசூழ்ந்த முதுகிரிப் பெண்ணரசி
சப்பாணி கொட்டி அருளே.

**(பொ.ரை)** கங்கையோடு பெரும் அலைகொண்ட கடலைச் சுற்றி பூமி காவலர்கள் முன் நிரப்புகின்ற காப்பு நான் கொண்ட பொற்குவியலோடும் திசைக்குரிய அதிபதிகளின் ஒளிவீசும் மணிக்கிரீடமும் கயிறும் தன் பெண்களோடு மயங்கிட, ஒற்றைச் சக்கரம் உருட்டி உலாவரும் சூரியன் வெயிலைக்கொடுக்கும். நர உலகம் தேவலோகம், நாகலோகம் எங்கும் அச்சப்பட, கொடுங்கோப மறவானை. உலகத்தைக் கடக்கச்செல்லும் எங்கள் சிவன் வீற்றிருக்கும் வெள்ளியங்கிரியின் மேல் ஏறி கொடிகட்டி வெம்முரசு ஆர்த்து வெற்றிச் சிறப்பை வெளிபடுத்திய அழகான செங்கோல் பிடித்த கையை உடையவளே சப்பாணி கொட்டியருளுக. குளிர்ச்சி பொருந்திய மணிமுத்தாறு சூழ்ந்த திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி உள்ள பெண்ணரசி போன்ற பெரிய நாயகியே சப்பாணி கொட்டியருளுக. (35)

## வேறு

6.எம்பெருமான் அடி வைத்த கருத்த ரிடர்க்கடன் மூழ்காமே
எச்சம யருமுள மச்ச முறீஇத்தம தெழிலுா லோதாமே
செம்பொரு ணிலையிது எனுமுப நிடதச் செவ்வழி கோணாமே
செந்நா நின்றுஉரை செய்திடு சுத்தச் செந்நூல் தோலாமே
சம்புசொ லின்படி பம்பனு பவநிலை சங்கைகள் சேராமே
சகசம துறவு உபதேசித்து அடிமுடி சாற்றிக் குமரன் வாய்க்
கும்பவள்ப்பால் ஊட்டிடு கைக்கொடு கொட்டுக சப்பாணி
கோதறு முதுகிரி ஆதி பராபரை கொட்டுக சப்பாணி.

**(பொ.ரை)**

எம்பெருமான் தொடங்கி வைத்ததினால் மற்றவர்கள் இடர்களில் மூழ்க மாட்டார்கள். எச்சமயத்தாரும் அச்சம் இன்றி தமது தொழிலைச் செய்வர். உபநிடதங்கள் சொல்லும் பொருள் நிலை மாறாமல் இருப்பர். நல்ல நூற்கள் சீர்கேடு இல்லாமல் உரைசெய்யும். ஆகமங்கள் சொல்லியபடி மெய்யுணர்வுகளை அனுபவ நிலையில் அளவோடு சேர்ந்திருப்பர். வைராக்கிய நிலையில் உபதேசித்து அடிமுடி வரலாறு கூறி குமாரதேவர்க்கு ஞானப்பால் ஊட்டிய கைக்கொண்டு சப்பாணி கொட்டியருளுக.

குற்றம் இல்லாத திருமுதுகுன்றத்தின் ஆதி இறைவியாகிய பெரியநாயகியே சப்பாணி கொட்டி அருளுக. (36)

7.அரவக் கிண்கிணி அணிதாள் தத்தடி ஆற்றிச் சிவவாமே
அங்கும தச்சிறு வாய்ப்பால் சங்கிட்டு அணியிதழ் கன்றாமே
பிரமப் புரபொய் கைக்கரை அயில்பால் வாய்வீ ணகாமே
பெருமான் என்பணி புயமலை பாமலர் பெய்தது சோறாமே
தரமறு பதிதரும் வீடுஅடை வித்தது தரையினி வாராமே
தண்டமிழ் நாடு தழைந்தது சைவஞ் சமணிருள் சாராமே
குரவணி காழிக் குழவியை அருள்பவள் கொட்டுக சப்பாணி
கோதறு முதுகிரி யாதி பராபரை கொட்டுக சப்பாணி.

(பொ.ரை) காலில் அணிந்துள்ள கிண்கிணியின் (சிலம்பு) ஒலி எழுப்புகின்றது. உன் பட்டுகால் நடக்கின்ற போது சிவந்து போகாமல் இருக்க வேண்டும். பால்கொடுக்கின்றபோது சங்கு, வாயில் பட்டு தழும்பு ஏறாமல் இருக்க வேண்டும். சீர்காழியில் பிறந்த ஞானசம்பந்தர்க்கு ஞானப்பால் ஊட்டியதால் வாய் பயனில்லாமல் ஆகிவிடக்கூடாது. பெருமானின் எலும்பு அணிந்த தோள் மலையில் எனது பாமாலை சேராமல் இருந்துவிடக் கூடாது. தரமான பதி தந்த வீடுபேறு மீண்டும் இப்புவனியில் பிறவாமை செய்யுமே. செந்தமிழ் நாட்டில் வளர்ந்துள்ள சைவம் இனி சமணருள் சாராமல் இருக்கவேண்டும். நறுமணம் பொருந்திய ஞானசம்பந்தரைக் காப்பவளே கொட்டுக சப்பாணி. குற்றமில்லாத திருமுதுகுன்றத்தின் மூத்த இறைவியாகிய பெரிய நாயகியே சப்பாணி கொட்டியருளுக. (37)

8.வாருந் தன்பனி நீரும் பொதிமுலை வளர்சங் கிலிபரவை
வந்தணை சந்தச் சேறு திமிர்ந்திடு வன்றொண் டன்னொருகால்
ஊருங் கிழமிவர் பேருங் கிழமெழில் உறுநதி யுங்கிழமேல்
ஒள்ளிய மனைவி பெருங்கிழ மென்றிகழ் உறுசொற் புவிமாறச்
சாருஞ் சோண கிரித்தவ னுறுபசி தணியத் தகும்அன்னஞ்
சட்சுவை கறியொடு வாலம் பிகையாய்த் தண்மலர்ப் பதம்நோவக்
கோரும் படிவந் தூட்டிய கரமலர் கொட்டுக சப்பாணி
கோமுது கிரியமர் வாமி மனோன்மணி கொட்டுக சப்பாணி.

(பொ.ரை) குளிர்ச்சிபொருந்திய நீர்நிலையுடைய, இளமையுடைய சங்கிலி பரவையின் கணவனான வன்தொண்டர் என்னும் சுந்தரர் ஒரு சமயம் இங்குவந்தபோது ஊரும்கிழம், இறைவன் பெயரும்கிழம், இங்குஓடும் நதியும் மேற்கும் கிழக்காக ஓடுகிறது. இறைவன் மனைவியும் கிழம் என்று இகழ்ந்து பேசிய சொல்மாற, இங்கு திருவண்ணாமலையிலிருந்து வந்த குருநமச்சிவாயரின் உறுபசி தணிய உணவைக் கொண்டுவந்த நீ பாலாம்பிகை என வடிவம் கொண்டு மலர்ப்பாதம் நோக வந்து உணவு ஊட்டிய கரமலரால் கொட்டுக சப்பாணி. மேன்மை பொருந்திய திருமுதுகுன்றத்து மனோன்மணி என்னும் பெரியநாயகியே சப்பாணி கொட்டியருளுக. (38)

9.மறைகடல் தெளிய வடித்தெடு தந்திர வழிபதி கத்தோடே
மகிழ்சிவ ஞானம் என்அமுது குழைத்திடு வள்ளமுலைப்பாலாற்
கறையறு கழுமலை மதலை வயிற்றை நிரப்பிய கைத்தாயே
கரிமுகன் எழில்அறு முகனை வளர்த்திடு கனசெவி லித்தாயே
அறைகுழல் இசைமலர் பிரசத் திரதத் தண்ணமிழ் தத்தோடே
அளவிய முதிர்கனி பொழிநறை மிக்கபெ ருக்கேபோற்
குறையற இதழ்த்தே றற்சொரி குயிலே கொட்டுக சப்பாணி
கோமுது கிரியமர் வாமிம னோன்மணி கொட்டுக சப்பாணி.

(பொ.ரை)

வேதமாகிய கடலை தெளியவைத்து தந்திரவழி பதிகம்பாட சிவஞானம் என்னும் அமுதை குழைத்து முலைப்பாலை குற்றமற்ற கழுமலத்தில் பிறந்த குழந்தையாகிய ஞானசம்பந்தரின் வயிறு நிரம்பக் கொடுத்த தாயே! யானை போன்ற .அழகுடைய முருகப்பெருமானை வளர்த்துவந்த பெருமையுடைய தாயே! உச்சிக்கூந்தல், இசைமலர், விளக்கம் கொண்ட குளிர்ச்சி பொருந்திய அமிர்தத்தோடே சேர்ந்த முதிர்ந்த கனி நீர்நிறைந்த பெருக்கேபோல குற்றமற்ற இதழ்களில் தேன் சொரிகின்ற குயில்போன்றவளே சப்பாணி கொட்டுக. மேன்மை பொருந்திய திருமுதுகுன்றத்து மனோன்மணி என்னும் பெரியநாயகியே சப்பாணி கொட்டியருளுக. (39)

## வேறு

10. வெயில்விடு கதிர்மணி பாரப் பூண்முலை
சிறுமியர் குடைபுன லார்பொற்றாமரை
விழுமடு வோடிப் பாய்தர மிக்க பெருக்கேபோற்
சுரிமுக வரிவளை சூலுற் றேபெறு
மணியொளி அலகினில் நிலாவொப் பாய்கவின்
மணமிகு கைரவவூறற்றேனொடு மண்டும் வயற்கோடி
செயின்மடை நடுவிடை பீறிக் கீறுமுள்
செறிமலர் கைதைத் தூறினை வேரொடு
சிதைய முறித்தலை வீசிய தன்கையில் செழியநீ றைத்தேறி
வளையருள் ஒன்றுறு தேரை இழுத்தெழு
பரியுடல் வியர்வறக் கால்மிக் கோச்சிடு
வளமுள சோலைசெவ் வேழ மடித்து முறுக்காலைப்
பயில்தெளி சாறு மிடாவிற் பாய்தரத்
தெறிதுளி மணிமுத் தாறுற் றேசெலப்
படுமலை யோதைக் கேயு ணடுக்க மெடுத்தோடி
அருகுறு தடமிள மேதி போய்விழ
அதில்வளர் உறுசெவ்வ ரால்நெட் டேடவி
அழகிய கதலிகள் சாய உயர்ந்த மடற்றெங்கின்
வியன்மிட றொடிபடக் காய்மிக் கார்குலை
உதிர்தரச் சாடிப் போய்விண் ணார்நதி
குடையும் வளஞ்செறி முதுகிரி அமர்மயில் கொட்டுக சப்பாணி.
குறையறி வுடையவென் மீதிற் சீரருள்
கொழிமலர் இணைவிழி மாறற் றேயுறக்
குலமலர் அடிநிழல் விடிட் டாள்பவள் கொட்டுக சப்பாணி.

**(பொ.ரை)**

சூரியனின் வெயில் வரும் வேளையில் இளம் பெண்கள் தாமரைகுளத்தில் குடைபோல் இருக்கும் இடத்தில் மடுபோன்ற நீர்மிகு வரும் இடத்தில் நீர்பெருக்கேபோல விளையாடுவர். சேறுநிறைந்த பகுதியில் கடல்சங்குகள் சூலுற்று அதுபெற்ற மணியின் ஒளிஅளவு நிலவுக்கு ஒப்பாய், அழகு, மணம் மிகுந்த

குமுதத்தோடு நெருங்கி வயல் கோடியில் உள்ள மடை நடுவில் முள்கள் நெருங்கிய மலர்கள், வாழைக்கன்றுகள் வேரோடு சிதைய முறிக்கின்ற அளவுக்கு வீசிய தன்கையில் நிறைந்த வளையுருள் ஒன்று தேரை இழுத்தெழுத்து உடல் வியர்வை ஏற்பட கால்கொண்டு வளமுள்ள சோலையில் கரும்பு ஆலையில் தெளிந்து சாறு குடங்களில் நிரம்பும்போது அதிலுள்ள துளிகள் மணிமுத்தாற்றில் செல்ல அதன் அருகில் புல்மேய்ந்து கொண்டிருக்கும் இளம் எருது கன்றுகள் மோதி விழ அங்கு வளர்ந்திருக்கின்ற அழகிய வாழைகள் சாய உயர்ந்த தெங்கின் கழுத்து ஒடியும் படி காய்கள் உதிர அந்த மணிமுத்தாறு நதியானது சாடிப்போய் தேவலோகத்து நதி வளம் சேர்க்கும் திருமுது - குன்றத்தில் அமர்ந்திருக்கும் மயில் போன்றவளே கொட்டுக சப்பாணி. குறைந்த அறிவுடையவன் மீதில் பெருமிக்க சிறந்த மலர் இரண்டு கண்கள் மாறற்றே உற தாமரைத் திருவடி நிழலில் ஆட்கொண்டு முத்தித் தருபவளே பெரியநாயகியே சப்பாணி கொட்டுக. (40)

**சப்பாணிப்பருவம் நிறைவுற்றது.**

# 5. முத்தப் பருவம்

1. உருகி உருகிக் கண்களில் நீர்
ஒழுகித் துதிநாத் தழும்பேறும்
ஒப்பில் தவத்த ருளக்கோயில்
உறையும் ஞான மணிவிளக்கே
குருகின் உருவாய் முடிதுருவுங்
கொச்சைப் பிரமன் அகந்தணியக்
குப்புற்று உருளக் குலவரைகள்
கோடா கோடிக் கொடுமுடியாய்ப்
பெருகி வளர்எம் பெருமாற்குப்
பிரியப் பெரிய நாயகியாய்ப்
பெண்ணிற்கு அரசாய் அண்டமெலாம்
பெற்று வளர்த்துப் பெருகிடவிண்
தருவிற் பொலியும் பெருங்கருணைத்

தாயே முத்தந் தருகவே
தக்கார் புகழும் விருத்தகிரித்
தாயே முத்தந் தருகவே.

(பொ.ரை)

உருகி உருகி கண்களில் நீர்சொரிய போற்றி, நாத்தழும் பேறும்படி, ஒப்பில்லாத தவத்தில் உளக்கோயிலில் வீற்றிருக்கும் ஞான மணிவிளக்கே! அன்னப்பறவை வடிவாய் முடிதேடியும் திருந்தாத பிரமன், அகங்காரத்தைத் தணிக்க கோடான கோடி முகடுகளாய் மலையாய் வளர்ந்த எம் சிவபெருமானுக்கு அன்பான பெரியநாயகியாய், பெண்களுக்கு எல்லாம் அரசியாய், உலகம் எல்லாம் பெற்று வளர்த்துப் பெருகி, வானவில் போல ஒளி வீசி பெரும் கருணை புரியும் தாயே முத்தம் தருகவே. தகுதியுடையோர் பாராட்டும் திருமுதுகுன்றத்து பெரியநாயகியே முத்தம் தருவாயாக. (41)

2. கஞ்சம் பொருவும் நின்னடியிற்
கண்மூன்று உடைய எம்பெருமான்
கலவி ஊடல் தணித்திடுவான்
கவிழ்ந்து வணங்கச் சிரம்பொலியும்
பிஞ்சு மதியின் அமுதகலை
பெருகி ஓட! இதழிநறை
பெருகிப் பாய விரிந்தசடை
பிறழாது அசைத்த படஅரவம்
நஞ்சு பிலிற்ற மான்அலற
நகுவெண் டலையும் உடனலற
நன்னீர் மகளங் கோட்டெடுக்க
நாடி நகைக்குந் திருவாயால்
தஞ்சத் துணைவற்கு அருள்புரியுந்
தாயே முத்தந் தருகவே
தக்கார் புகழும் விருத்தகிரித்
தாயே முத்தந் தருகவே.

(பொ.ரை)

தாமரையை ஒத்த நின்பாதத்தில், மூன்று கண்களை உடைய சிவபெருமான் சேர்ந்து ஊடலை தணித்திடுவான். குனிந்து வணங்க கைகளின் பிரகாசமும் இளம்பிறையின் அமுதகலை பெருகி ஓட, கொன்றைப்பூவின் தேன் பெருக, விரிந்த சடை மாறாது. அசைகின்ற படம் எடுத்த பாம்பு நஞ்சை வெளியிட சிவபெருமானின் கையிலுள்ள சிறுமான் ஓலம் இட தலையோட்டையும், கையில் அனலும் தலையில் கங்கையும் கண்டு நகைத்தவர்கள் நாடி திருவாயால் சரணடைந்தவர் களுக்கு அருள்புரியும் தாயே முத்தம் தருவாயாக. தகுதியுடையோர் புகழும் திருமுதுகுன்றத்து பெரியநாயகித் தாயே முத்தம் தந்தருள் வாயாக. (42)

3. அண்டர் அயன்மாற் கரியவெம்மான்
அவுணர்க்கு இறையாம் இலங்கையர்கோன்
அவிரும் நவரத் தினம்இழைத்த
அரிய மணிமா ளிகையதனைக்
கொண்ட காவ லாணையையுட்
குறியாது அடைந்துஅங்கு அவன்மனைவி
கொங்கை புணர்ந்து மலரணையிற்
கொஞ்சும் அமையத்து அவன்வரவு
கண்ட பொழுதே மதலையுருக்
காட்டி மலர்வாய் குவித்துஅழுது
கண்ணீர் பாயக் குறம்பாடிக்
கையேற் றெடுத்து மார்பணைத்துத்
தண்ட ரளமுத் திடும்வாயால்
தாயே முத்தந் தருகவே
தக்கார் புகழும் விருத்தகிரித்
தாயே முத்தந் தருகவே.

(பொ.ரை)

தேவலோக பிரமன் திருமாலுக்கு அரியவன். அசுரர்களின் தலைவனான இலங்கைக்கு அரசன் அமர்ந்த

நவர்த்தினத்தினால் அமைக்கப்பட்ட மணிகளால் செய்யப்பட்ட மாளிகையின் காவலன். ஆணைக்குட்பட்டு நிற்காது அவன் மனைவி மண்டோதரியுடன் மலரணையில் மகிழ்கின்ற தருணத்தில் இந்திரன் வருகை அறிந்து குழந்தை உருவம் காட்டி, அழுது கண்ணீர் வடித்து குறம்பாடி கையால் எடுத்து மார்பணைத்து முத்தம் இட்ட வாயால் பெரியநாயகித் தாயே முத்தம் தருவாயாக. தகுதியுடையோர்கள் புகழும் பெரியநாயகித் தாயே முத்தம் தந்தருள் வாயாக.

(43)

4. ஐந்து பொறியும் புலன்வழியில்
ஆமை உறுப்பைந்து அடக்குதல்போல்
அடையாது அடக்கி நடுநிலையில்
அடுக்கும் நினைப்பு மறப்பதூம்போய்ச்
சிந்தை ஒருங்கிச் சமனான
செய்ய தராசின் நுனியதுபோற்
செவ்வே யிருந்துந் தனையருளைத்
தேர்ந்து பரையைத் திளைத்துமே
எந்தை அடிக்கீழ் இரண்டறநல்
இன்பப் பூவை யொடுஞ்சுகித் தங்கு
இறுமாந்து இருக்கும் பெருந்தவத்தோர்
ஏற்றித் துதித்துக் கேட்டவரந்
தந்து புரக்கும் எழில்வாலைத்
தாயே முத்தந் தருகவே
தக்கார் புகழும் விருத்தகிரித்
தாயே முத்தந் தருகவே.

(பொ.ரை) ஐந்து பொறிகளின் புலன்வழியில் ஆமை உறுப்புபோல ஐந்தை அடக்கி சுழுமுனையில் அடக்கும் நினைப்பு மறந்துபோய், மனதை ஒடுக்கி. தராசின் சமமான முள்போல சிறப்பாக இருந்து தனது அருளை ஆய்ந்து குண்டலினி சத்தியை எழுப்பி எங்கள் தந்தை (சிவன்) திருவடிக்கீழ் இரண்டறகலந்து இன்பநாதத்தில் லயித்து மகிழ்ந்து இருக்கும் பெருந்தவத்தோர்களில் உன்னைப் போற்றி பாராட்டியவர்களுக்கு கேட்டவரம் கொடுத்துக் காக்கும் அழகுபொருந்திய வால வடிவத்தாயே முத்தம் தந்தருள்க.

தகுதியுடையோர்கள் போற்றும் பெரியநாயகித் தாயே முத்தம் தந்தருள்க.

(44)

5. வானப் புனலுள் வாங்கும் இப்பி

வரும்வெள் ளாணி முத்தும் நின்சேய்

வண்ணச் சிவிகை யார்த்தழகு

மாண்ட கரும்பின் முத்துஅரன்

மோன நுதற்கட் டழற்படிந்து

முறிந்த கயலின் முத்தும், எழின்

மூங்கில் தூங்கித் தேய்ந்தபுயல்

முத்தம் திரள்கால் இழிவடைந்த

கூன லிளவெண் சங்கீன்ற

கொழுமுத் தெழில்வே யீன்றமுத்துங்

கொண்ட நிறத்தோன் வாயெச்சிற்

குமுமி நாறும் எழின் முத்தித்

தான மளிக்கு நின்கனிவாய்

தாயே முத்தந் தருகவே

தக்கார் புகழும் விருத்தகிரித்

தாயே முத்தந் தருகவே.

**(பொ.ரை)** ஆகாயத்தில் இருந்து சுவாதி நட்சத்திரத்தில் விழும் மழைத்துளியைத் தன்னுள் ஏற்பதனால் சிப்பியில் தோன்றும் வெள்ளைநிற வயிரமுத்து, சிவப்பு வண்ண கழுத்தணிமுத்து, கரும்பின் கணுவில் உதிக்கும் முத்து, மீன்களில் பிறந்தமுத்து, மேகத்தில் தோய்ந்த புயல்முத்து, வெண்சங்கீன்ற முத்து, மூங்கிலிருந்து பிறந்தமுத்து இவற்றை எல்லாம் கொண்ட நிறத்தோன் வாய் எச்சில் நிறைந்து இருக்கும். இப்படி சிறந்த முத்தி அளிக்கும், இனிய வாயை உடைய தாயே முத்தம் தருக. தகுதியுடையோர்கள் போற்றும் பெரியநாயகித்தாயே முத்தம் தந்தருள்க.

(45)

## வேறு

6. இணை அடியின் மணியிட்டு இழைத்திடு சிலம்புறை

இடுசிறு குரற்கிண்கிணி

இற்றிடும் இதிற்றிடும் என்று இரங்கிடும்

மேகலைக்கு இசையப் பட்டுவீக்கும்
பணைமுலை சுமந்தவிடை யொட்யாண முங்கரப்
பங்கயத் தேந்துகிளியும்
பைந்தரள மாலைமார் மேலுத்த ரீயமிடப்
பகல்செய்மாங் கலியநாணும்
இணையின்மதி முகமும்அம் மதிநடு அரும்புகுறு
விளநிலாப் புன்முறுவலும்
எவ்வுயிர்க்குங் கருணை பொழிவிழியும் மரகத
வெழிற்கோல நோக்கியெம்மான்
பணைமென் புயங்கொண்டு அணைத்துமுத் தாடுசெம்
பவளவாய் முத்தமருளே
பழமலையின் வளர்வன்னி நிழலமர் பரன்பன்னி
பவளவாய் முத்தமருளே.

**(பொ.ரை):** திருவடியின் சிலம்பில் மணியிட்டு கிண்கிணி ஓசை ஏற்படுத்தும். இடையில் கட்டப்பட்டிருக்கும் மேகலை என்னும் ஒட்டியாணத்திற்கு ஏற்றவாறு பட்டுசேலை கட்டபட்டிருக்கும். தாமரை போன்ற கையில் கிளியும் கழுத்தில் மாலைகளும் அதன்மேல் ஒளிவீசும் மாங்கலிய நாணும், இணையான சந்திர முகமும் அந்தமதி நடுவில் கீழ்நோக்கிய பிறைசந்திரனும் சிரித்தமுகமும் எவ்வுயிர்க்கும் கருணை கொடுக்கும் விழியும் பச்சைநிற எழில் கோல பார்வை எம்மானை மூங்கில் போன்ற மென்மை தோள் கொண்டு அணைத்து முத்தாடும் செம்பவள வாய் உடையாளே முத்தம் தந்தருளுக. பழமலையில் உள்ள வன்னிமர நிழலில் அமர்ந்திருக்கும் பழமலைநாதர் மனைவியாகிய பெரியநாயகியே உன்பவளவாயால் முத்தம் அருளுவாயாக. (46)

7. ஐயமுறு துடியிடை துவண்டிட வுறச்சூழும்
அறுகாற் சுரும்பர்பாடும்
அஞ்சிலோ திப்பனி மலைக்கரையன் மனைவிகச்
சார்த்தமுலை மலையிலாலுந்
துய்யவெண் டரளவொளி மதிநிலாக் கற்றையிற்
றுளும்பமுத கலையைமானத்

தோமறு சகோரமுண வாக்கருதி யுள்ளவண்
துண்டமிட் டள்ளியுணல்போற்
கைவலி நிலாக்கதிர் சிதறிடுந் திவலையினொர்
கதிர்முத்தம் நாசிநாலக்
கயல்விழி கடைப்பிறழ அருவியென ஒழுகுபாற்
கதிர்முலை விற்கைவருடப்
பையவொர் தனம்பிடித் துண்டசிறு குழவிசெம்
பவளவாய் முத்தம்அருளே
பழமலையின் வளர்வன்னி நிழலமர் பரன்பன்னி
பவளவாய் முத்தம்அருளே.

**(பொ.ரை)** அய்யமுறுகின்றவாறு இடைதுவண்டு விழும் படி இருக்கின்ற தாயே, அறுகில் வண்டினங்கள் பாடும்பாட்டு அஞ்சாதே என்று கூறும் இமய மலையின் தலைவனின் மனைவியாகியத் தாயே, இமயமலையில் தொங்கும் வெண்மையான ஒளிவீசும் முழுமதி கதிர் கூட்டத்தில் பக்குவப்பட்ட மானை, குற்றமற்ற சக்கரவாகப் பட்சியை உணவாக எண்ணியுள்ளதை எடுத்து உண்பதுபோல கை வலிமையால் நிலாக்கதிர் சிதறிவிடுகின்ற அந்த திவலையில் ஒருகதிர் மூக்கு நுனியில் முத்தம் தரும். கயல் விழி முடிவில் அருவிபோல பால் ஒழுகுகின்ற கொங்கையைக் கையால் வருட மெதுவாக மார்பைப் பிடித்து உண்ணும் சிறிய குழந்தைபோன்ற செம்பவள வாய் உடைய தாயே முத்தம் தந்தருளுக. பழமலையில் உள்ள வன்னிமர நிழலில் அமர்ந்திருக்கின்ற பழமலைநாதர் மனைவியாகிய பெரியநாயகியே பவளவாயால் முத்தம் தந்தருளுக. (47)

## வேறு

8. அக்க மனற்பொறி தக்க கடக்கரி
அட்ட தலைப்புனையா
வச்சுரர் மெச்சிட மட்டிலு நற்கணை
யைப்புற னிட்டெலுலார்
செக்கர் சடைக்கர வைக்கொடு கட்டி
இறுக்கி முடித்தணியாச்

செங்கட் பணிநாண் ஏற்றிப்பொன் மலையத்
திண்தனு வாய்ப்பிடியாத்
தக்க புவித்தொழின் மிக்கிர தத்தை
நடத்தித் தருக்கினொடுந்
தழலெழ முப்புர நகையி னெரித்திடு
தழைசினை வன்னிநிழன்
முக்கணர் பக்கம் முளைத்த பசுங்கொடி!
முத்தந் தந்தருளே!
முத்த நதிக்கரை யற்பொலி சிற்பரை!
முத்தந் தந்தருளே!

(பொ.ரை) நெற்றி கண்ணில் தீப்பொறியும் யானை தோல் உரித்து போர்த்திய அலங்காரம், அசுரர்கள் போற்றிட அம்புகள் விட்டு இளமையுடைய செவ்வானைக்கூட்டம், கரவைக் குருவி ஒலிப்பது போல இறுக்கி முடி அணியாத சிவந்தபாம்பை நாணாக் கொண்டு மேருமலையை மத்தாகப் பிடித்து கடையல் தொழில் செய்யும் சிறந்த தேரை ஓட்டிய செருக்குடையவருடன், அக்கினி எழ முப்புரத்தையும் சிரிப்பால் எரித்திடுகின்ற கோபம் கொண்டவன். வன்னிமரத்தின் நிழலில் எழுந்தருளியிருக்கும் முக்கண்ணனார் பக்கம் தோன்றிய பசுங்கொடி போன்ற பெரியநாயகியே முத்தம் தந்தருள்வாயாக. முத்தித்தரும் மணிமுத்தாற்றின் கரையில் பொலிவுற்றிருக்கும் கடவுளே! பெரியநாயகியே முத்தம் தந்தருள்வாயாக. (48)

## வேறு

9.சிமய வெற்பன் மனையி யற்றுந் தவப லப்பெண் பிடியனாய்!
செறியி சைப்பண் புறவு உரைக்குஞ் சிலசொல் கற்குஞ் சிறுகிளாய்!
இமைய வர்க்கின் மனைவி யிற்சந் ததியொழிக்கும் இறைவியே!
இறைவர் மெச்சங் கவுரியர்சந் ததிவ ளர்க்கும் எழிலியே!
சமைவு டைத்தண் டரணிமுற்றுந் தனிபுரக்குங் தலைவியே!
சதும றைக்கிண் கிணிய ரற்றும் பதநி னைக்குஞ் சதுரர்கள்
தமைப்பு ரக்குங் கருணை நற்பெண்! தருக முத்தந் தருகவே
தடமு துக்குன் றிடைபொ லிப்பெண் தருக முத்தந் தருகவே.

(பொ.ரை) உயர்ந்த சிகரத்தை உடைய இமயவரையன் வீட்டில் தவம் செய்யும் பெண்யானை போன்றவளே. குறிஞ்சி நிலத்தில் இருந்துவரும் நல்லஇசைபோன்று பாடல் உரைக்கும் சிலசொற்களைப் படிக்கும் சிறுகிளியே. இமையவரம்பனின் மனைவியின் பரம்பரையை ஒழிக்கும் தலைவியே. சிவபெருமான் போற்றும் சிவகுமாரர்கள் வளர்க்கும் அழகு தாயே. மக்கள் பொருந்திய உலகங்களைக் காத்துக் கொண்டிருக்கும் அழகுடையவளே. நான்கு வேதங்களையும் ஒலித்துக் கொண்டும் நினைத்துக் கொண்டிருக்கும் அறிஞர்களைக் காக்கும் கருணை கொண்ட நல்ல பெண்ணே! முத்தம் தந்தருள்கவே. பெருமையுடைய முதுகுன்றத்தில் விளங்கிக் கொண்டிருக்கும் பெண்போன்ற பெரிய நாயகியே முத்தம் தருகவே. (49)

## வேறு

10. துன்றிருள் சென்று கிழித்திடும் மதிகதிர்
சூழ்கடல் வளைபுவியில்
துரிசற அடிமைசெய் வழிவழி அடியர்
பொருட்டலர் வட்டணையிற்
சென்றுழல் வண்டிசை கொண்ட குழற்றிரு
வைச், செழி வெண்கமலச்
செல்வியை, உயிர்கள் தொறும்பொலி ஞானத்
திருவையும் வலம்இடமாய்
ஒன்று நுதற்புறம் வைத்திடும் முக்கணி
ஒப்பில் பராபரையே!
யொண்டவ மில்லரு மண்டிசெய் தொண்டுள
முறுசிந் தாமணியே!
முன்றவர் தேடி அளித்திடு பொற்கொடி !
முத்தம் அளித்தருளே !
முதுகிரி அதனின் முளைத்த பசுங்கொடி!
முத்தம் அளித்தருளே.

(பொ.ரை) இருளை அகற்றிடும் சந்திரனின் கதிர்கள், கடலால் சூழப்பட்ட இந்தப்பூமியில் குற்றமற்ற அடிமைத் தொழிலை வழிவழியாக செய்துவரும் அடியார்கள் வட்டமான தாமரை மலரில் சென்று உழன்று வண்டிசைக் கொண்ட இலக்குமி, செழிப்பான சரசுவதி செல்வியை உயிர்கள் தோறும் பிரகாசிக்கின்ற சிற்சத்தியான இலக்குமியையும் வலப்பக்கமும் சரசுவதியையும் இடபக்கமாகவும் வைத்திடும் முக்கண்களை உடைய ஒப்பில்லாதவளே. இரு கால்களை முடக்கி தொண்டு செய்கின்ற சிந்தாமணியே. இமயவரன் தேடி அளித்திடும் பொற் கொடியே முத்தம் தந்தருள்க. திருமுதுகுன்றத்தில் தோன்றிய பசுங்கொடிபோன்ற பெரியநாயகியே முத்த அளித்தருள்வாயாக.

(50)

**முத்தப்பருவம் நிறைவுற்றது.**

## 6. வருகைப் பருவம்

1. அம்பொன்மணி மேகலை அசைந்திடச், செஞ்சிலம்பு
ஆர்ப்பநின் சீறடி பெயர்த்து
அடியிடுந் தொறும்உனது அலத்தகச் சுவட்டெழில்
அரம்பையர்கள் புவிமாதர்தம்
வம்பலர்கண் நோக்கிட வலம்புரியும் எந்தை முடி
வளரிளம் பிறையும்நாறும்
வண்நூ புரத்தினொலி கற்றிடற் கோஅசையும்
மடநடை பயின்றிடற்கோ
செம்பொனடி கைப்பற்றும் தெய்ப் பிணாக்களொடு
சிறையோதி மம்பின்செலச்
சிற்றிடை யொசிந்துதள் ளாடிவிழி யருண்மடை
திறந்து ஒழுக எனதிதையமும்
அம்பொன்மணி மன்றுந்த னாலய மெனக்களித்
தமரிளம் பிடிவருகவே
அண்டமுழு துங்கரு வுயிர்த்தவிருத் தாம்பிகைஎன்
அழகுபூங் கொடி வருகவே.

**(பொ.ரை)** திருமேனியில் அணிந்துள்ள பொன், மணி, மேகலை அசந்திட காலில் அணிந்துள்ள சிலம்பு ஆரவாரிக்க, பொற்பாதம் எடுத்து அடியிடும் தோறும் உனது செம்பஞ்சு பாதையில் அரம்பையர்கள், பூமி மாதர்கள், தங்கள் அயலார்கள் பார்க்க வலம் வரும் எங்கள் சிவபெருமான் முடியில் இருக்கும் வளரும் இளம்பிறையும் மணக்கும். சிறந்த கால் சிலம்பின் ஒலி பயில்வதற்காகவோ அசையும், நடைபயில்வதற்கோ செம்மையான அடி கைப்பற்றும் தெய்வப்பெண்டிர்களோடு அன்னம் பின் செல்ல, சிறிய இடையை அசைத்து தள்ளாடி கண் அருள் நோக்கம் சிறக்க எனது இதயமும், கனகசபை, ரத்னசபை முதலாய ஆலயம் எல்லாம் பார்க்க எனக்களித்த வலிமையுள்ள இளம் பெண் யானை போன்றவளே வருக. உலகம் முழுவதையும் பெற்றெடுத்த பெரியநாயகியம்மை என்னும் எங்கள் அழகு பூங்கொடியே வருகவே.

(51)

2. பொன்னோடு விலங்கலை வலஞ்சூழும் இருகதிர்கள்
பொழியுமனல் விடவரவின் வாய்ப்
போராட்டி னுக்கஞ்சி நறையொழுகு செஞ்சலசப்
பூவிடை ஒளித்தல் மானத்
தன்நிகரில் பரன்விழி முச்சுடரில் அங்கியைத்
தன்வல மலர்க்கை வைத்துத்
தண்மதி தனைச்சடையின் வைத்ததென வையாமை
தானுணர்ந்து உனது செவியின்
மின்பருதி சுடர்விடு குழைத்தோடு இலங்கவளை
மிளிர்கைக்கங் கணமார்த்திட
மென்குழ்ன் முடித்தபூ நறையுண்டு களிவண்டு
மிடறுடைந்து இசைபாடிட
அன்னநடை தளர்வெய்த ஆயமுடன் ஆடல்புரி
அழகிளம் பிடி வருகவே
அண்டமுமு துங்கரு வுயிர்த்தவிருத் தாம்பிகைஎன்
அழகுபூங் கொடி வருகவே.

**(பொ.ரை)** பொன்போன்ற மலையில் வலம்வரும் இருகதிர்கள் வீசும் ஒளி பொருந்திய மலையின் வாய் போராட்டத்துக்கு அஞ்சி, தேன் ஒழுகும் செந்தாமரைப் பூவினைப் பிரகாசிக்க செய்யும் படியான தனக்கு நிகரில்லாத முக்கண்ணையுடைய சிவபிரானின் நெருப்பை தனது வலது மலர்க்கைப் பக்கம் வைத்து குளிர்ச்சி பொருந்திய சந்திரனை சடையில் வைத்ததானதை உணர்ந்து உனது செவியின் சூரியனின் கதிர் காதணிகளோடு சுற்றி ஒளிகின்ற கை அணிகலன்கள் ஒலித்திட கூந்தலில் வைத்துள்ள பூ வில் தேன் உண்ட வண்டுகள் நெஞ்சடைந்து இசைபாடிட அன்ன நடை தளர்ந்துள்ள தோழிகளுடன் ஆடல்புரியும் அழகிய இளம்பெண் யானை போன்ற பெரியநாயகியே வருக!. உலகம் முழுவதையும் பெற்றெடுத்த பெரியநாயகியம்மையே எங்கள் அழகு பூங்கொடியே வருகவே.

(52)

3. மண்டிரத பாலாழி வயிறுளைந் தீன்றபொன்
வனிதையும் மதுரமொழுகும்
வண்டமிழ்த் துறைபடியும் மடநடைப் பிடியும்நிறை
மதுஉண்ட களிவண்டறாப்
பண்டழைக் குங்குமல மனைகுடி தகத்தொண்டு
பண்ணும் பெருந்தொண்டர்தம்
பருமான தத்தடப் பூங்கோயில் குடிகொண்ட
பச்சைமர கதவல்லிவெண்
புண்டரப் பொடிவிரவு செம்புய மலைக்கணழல்
பொங்குவெங் காரிபில்கும்
புழைவெயிற் றரவணி புராந்தகக் கொழுநரொடு
போந்தடியர் மிடிதீர்த்திடும்
அண்டர்முனி வரரிருடி யாதியர் துதித்தமணி
யாற்றிளம் பிடிவருகவே
அண்டமுழு தும்கரு உயிர் த்தவிருத் தாம்பிகையே
அழகுபூங் கொடி வருகவே.

**(பொ.ரை)** கால்மண்டி பாற்கடலில் வயிறு நொந்துபெற்ற இலக்குமியையும் தேன்சிந்தும் தீந்தமிழ்த் துறை சேரும் அன்ன நடைபெண் யானையும் அதிகமாக தேன் குடித்த வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டிருக்கும் தாமரை வாசனை குடிகொண்டிருக்கும் அகத்தொண்டு செய்யும் தொண்டர்கள் தன் பெரிய மணம் பொருந்திய அழகிய கோயிலில் குடிகொண்ட பச்சை மரகதவல்லியே வெண்ணீறு புரள செம்மையான தோளும் இமயமலைக்கண் வெளிப்படும் நெருப்பு காரணமாக வரும் பாம்புகளை அணிந்திருக்கின்ற திரிபுராந்தகர் என்னும் சிவன், சுற்றத்தாரோடு சென்று அடியார்கள் துன்பம் தீர்த்திடுவார். தேவர்கள், முனிவர்கள், இருடியர் முதலியோர் வழிபடும் திருமணி முத்தாற்றின் கரையில் வீற்றிருந்தருளும் இளம்பெண் யானை போன்ற பெரிய நாயகியே வருகவே. உலகம் முழுவதையும் தோற்றுவித்த பெரியநாயகியே அழகுபொருந்திய பூங்கொடியே வருகவே.

(53)

4. காரிருள் தொலைக்குமிள ஞாயிறென வொளிவிடுங்
கதிர்மணிச் சபையிலெம்மான்
கட்கடை பிறந்தகரு ணைப்புணரி நீத்தமெழு
கடன்மடை திறந்த தேய்ப்பச்
சீறிடவ ரத்தமரு கங்கர முழக்கிடத்
திக்கின்மழு வெரி தாவிடச்
செங்கைமா னலறிடச் சிரமாலை கலகலெனத்
திண்தோள் நிமிர்த்து அசைத்துத்
தேறிடு புலிக்குட்டி கண்புனற் றுளிப்பவிதி
செங்கைதா ளங்கள் கொட்டத்
திருமகண் மணாளன்கை மத்தளம் முழக்கிடத்
தித்திமிதி தெய்த்தெய்யெனவே
ஆரியர் "**சபாசெ**" ன்று தோள் தட்ட ஆடல்கண்டு
அமரிளம் பிடிவருகவே
அண்டமுழு துங்கரு உயிர்த்தவிருத் தாம்பிகைஎன்
அழகுபூங் கொடி வருகவே.

**(பொ.ரை)** கரிய இருளை மாற்றும் இளம் ஞாயிறு என ஒளிவீசும் கதிர்மணிச்சபையில் சிவபெருமான் கடைக் கண்ணால் பிறந்த, கருணை புரிந்த நீரில் நாள்தோறும் எழுந்து கடன்களை முடிக்கின்ற, உடுக்கை, மழு, அக்கினி, மான் ஒலி எழுப்புகின்ற தலைமாலை, வலிமையுடைய தோள், நிமிர்ந்து அசைத்தபோது வியாக்கிரபாரதர் கண்கொண்டுப் பார்க்க, பிரம்மா சிவந்தகை கொண்டு தாளம்தட்ட, திருமகள் கணவன் திருமால் கையால் மத்தளம் ழுழ்கிட, தித்திமிதி தெய்த் தெய்யனவே மகிழ்ச்சி ஒலி செய்யனவே முனிவர்கள் "**சபாசென்று**" தோள்கள் தட்ட அந்த ஆடல்களைக் கண்டு மகழும் இளம்பிடி போன்ற பெரியநாயகியே வருக. உலகம் முழுவதையும் பெற்றெடுத்த பெரியநாயகித் தாயே என் அழகு பூங்கொடியே வருக. (54)

5. மேடம்ஒன் றோடுஒன்று பொருதும்ஒலி யானைபோர்
மேவொலியும் இளைஞர்கடவும்
வேகவாம் பரியின்ஒலி வெம்பருத்தி தேர்பூட்டி

விடுபரிகள் நாணஈர்க்கும்
மாடமார் வீதியில் உருட்டுதேர் ஒலியும்மண
மங்கல வியத்தின் ஒலியும்
மலியலைக் கடல்ஒலியும் மஞ்சிடி முழக்கொலியும்
மாறத் தெழிக்கும்வடிவா
ணாடரிய மதனைநிகர் ஆடவரொ டூடியிள
நங்கையர்கள் அணிகலன் எலாம்
நன்மலர் கரங்கொண்டிழுத்தமறு கெறியுமொலி
நண்ணுதிரு மறுகோதைவேறு
ஆடக மணிப்பணியின் அழகுசெய்வ ளத்தநகர்
அமரிளம் பிடிவருகவே
அண்டமுழு தும்கரு உயிர் த்தவிருத் தாம்பிகையென்
அழகுபூங் கொடி வருகவே.

**(பொ.ரை)** ஆடுகள் ஒன்றொடு ஒன்று போரிடும் ஒலியும், யானைச் சண்டை ஒலியும், ஆண்கள் குதிரைகளை வேகமாகச் செலுத்தும் போது ஏற்படும் குதிரைஒலியும், சூரியன் தேர்ப்பூட்டி விடும் கதிர்கள் ஈர்க்கும் பெண்கள் வீதியில் உருட்டும் தேர் ஒலியும் மங்கல வாத்தியங்களின் ஒலியும் கடல் ஒலியும் மேகங்களின் இடி மின்னல் ஒலிகளும் மன்மதனை இழிவு படுத்தும் ஒத்த ஆடவரோடு ஊடியிருக்கும் இளம் நங்கையர்களின் ஆபரணங்கள் எல்லாம் மறுபக்கத்தில் எறியும் ஒலியும், நெருங்கிய வீதிகளின் ஓசை வேறு. நடனப்பணியில் அழகுசெய்கின்ற நகரில் எழுந்தருளியிருக்கும் போர் செய்யும் இளம் யானை போன்ற பெரிய நாயகியே வருக. உலகம் முழுவதும் பெற்றெடுத்த பெரியநாயகி என்னும் அழகு பூங்கொடியே வருக. (55)

## வேறு

6. சோலை ஒலிக்குங் குருகினங்கள்
சுரும்பர் ஒலிக்குங் கமலமனைச்
சுருங்கு முகவெண் சங்குஒலிக்குஞ்
சொரிதேன் குமுத மீயொலிக்குங்
காலை ஒலிக்குங் குக்குடங்கள்

கதிர்போய் விழுமேற் கடனிலவுக்
கற்றை விரிக்கும் மதியை முகக்
கமலம் வாட்டும் மாதர் நடச்
சாலை ஒலிக்கும் இசைகேட்டுச்
சலசத் திருவாய்ச் சிரிப்பொலிக்குஞ்
சற்று மறிவில் லாவெளியேன்
சாற்றும் **இந்தச் தமிழ்ச்சொன்மலர்**
**மாலை** ஒலிக்கும் புயமடமா
மயிலே வருக வருகவே
மஞ்சார் பொழில்சூழ் விருத்தகிரி
வாழ்வே வருக வருகவே.

**(பொ.ரை)** சோலைகளில் ஒலிக்கும் பறவை, வண்டு இனங்கள் ஒலிக்கும், . மலை அருவிகள், சுருங்கிய முகம்கொண்ட வெண் சங்குகள் ஒலிக்கும், தேன் சொரியும் தேனீக்கள் ஒலிக்கும், சேவல்கள் காலையில் ஒலிக்கும், சூரியனின் கதிர்போய் விழும், மேற்கு கடலில் தோன்றும் நிலவின் கதிர்விரிக்கும், அதனைக்கண்டு தாமரை வாடும், மாதர்கள் நடன அரங்கம் ஒலிக்கும் இசைகேட்டும் மக்களின் திருவாய்கள் சிரிப்பொலிக்கும். சற்றும் அறிவில்லா எளியேன் கூறும் இந்தத் தமிழ்ச் சொன்மலர் மாலை பிரகாசிக்கும். அழகான பெண் மயில் போன்ற பெரிய நாயகியே வருக! வருக! மஞ்சார் சோலை சூழ்ந்திருக்கும் திருமுதுகுன்றத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் பெரியநாயகித் தாயே வருக! வருக!!. (56)

7. திருவீற் றிருக்கு மகன்மார்பச்
செம்மற் புயலு முலகனைத் துஞ்
செய்யுங் கமல வட்டவணைத்
திசைமா முகனுந் தொழுதேத்து
மருவீற் றிடுமான் மதமளைந்து
வளரு முலைமா மலைசுமந்த
மகளி ராசைக் கடல்வீழ்ந்து
மாயா உடலச் சுகம்வேட்டுக்

கருவீற் றிருக்குங் கடிதடத்துக்
கடல்வீழ்ந்து உழலுங் கடையேனைக்
கைதந்து எடுத்து முத்திஎனும்
கரைசேர்த்து அளித்த பரன்முடிக்குக்
குருவீற் றிடுமா முடிதரித்த
கோதாய் வருக வருகவே
கோலத் திருமா முதுகிரிப்பூங்
கொம்பே வருக வருகவே.

(பொ.ரை)

திருமகள் வீற்றிருக்கும் திருமால் மார்பனே. வலிமையுடைய தோளுடையவனும் உலகனைத்தையும் காத்துவரும் திருமாலின் உந்திக் கமலத்தில் வீற்றிருக்கும் நான் முகனும் தொழுது பாராட்டும். வாசனை தங்கும் கஸ்தூரி கலந்து வளரும் பெண்கள் ஆசைக் கடலில் வீழ்ந்து நிலையற்ற மாயை என்னும் இந்திரியச் சுகம் கொண்டு கருவீற்றிருக்கும் இன்பக் கடலில் வீழ்ந்து உழலும் கடையேனை கை கொடுத்து முத்தி எனும் கரையைச் சேர்த்து சிவன் முடிக்கு ஒளிவிளக்காக சிகரமாக விளங்கும் பெரியநாயகி என்னும் கோதாயே வருக! வருக! அழகாய் காணப்படும் பெரியமுதுகுன்றத்து பூங்கொடி போன்ற பெரியநாயகியே வருக! வருக!! (57)

8. தேயா தொளிர்பொன் மங்கலமுந்
திதலை படர்ந்து செம்மாந்து
திரண்டு நெருங்கிப் புடைத்துவளர்
திகழ்மென் முலைக்குன் றிரண்டேந்தி
வீயா வளஞ்சேர் விண்ணுலகும்
வியன்பூ வுலகுஞ் சராசரமும்
விளங்கி அசைய அசையாத
விமலன் தானும் அசைந்திடவெந்
தீயார் விடமுண்டு உகந்தவரன்
செங்கை மலர்தொட் டமுக்கலின் மேற்
சிறியேன் தலைக்கே ரலர்சிலம்பு

சிலம்பு வெடுத்தேற் றழிவில்பொருள்
வாயார் குதவு மடிப்பெயர் த்துஎன்
வாழ்வே வருக வருகவே
வையம் புரக்கும் பழமலைக்கண்
மணியே வருக வருகவே.

**(பொ.ரை)** மாறாத ஒளியும் பொன் மங்கலமும் தேமல் படர்ந்து உயர்ந்து திரண்டு புடைத்திருக்கும் கொங்கைகள் இரண்டுடைய, நீக்கமற வளஞ்சேர்த்திருக்கும் விண்ணுலகுக்கும் பெருமையுடைய பூவுலகுக்கும் அண்டசராசரமுமாக விளங்கி சிவனாய் குற்றமற்றவனுமாக அசைந்திட அக்கினியுடன் விடம் குடித்தவர்க்கு உகந்த மணமகளே. செம்மையான பாதத்தை அம்மிக்கல் மிதித்து பரிச தீட்சை செய்து சிலம்பு அணிந்து அழிவற்ற பொருளாகிய உபதேச மந்திரத்தை நின் வாயால் குற்றமற்ற விளங்கும் நின் திருவடி வைக்கும் எனது வாழ்வாகிய பெரியநாயகியே வருக வருகவே. உலகத்தை எல்லாம் காக்கும் பழமலைக் கண்ணின் மணிபோன்ற பெரியநாயகியே வருக வருகவே. (58)

## வேறு

9. ஆழி யலைநே ரெங்கள்பவம்
அகற்ற வருக மலச்சிறைவிட்டு
அகற்றிப் புவித்தா யுதரமினி
அடையா தெழிற்றாள் தரவருக
தாழ்வி லாப்பே ரருட்செல்வந்
தழைய வருக மெய்ஞ்ஞானந்
தங்கு மௌனந் ததும்பாத
தனிப்பே ரின்பந் தரவருக
ஊழி யினுங்கெட்டு உலவாத
உண்மைத் தவத்தர் உளக்கோயில்
ஒளிரு ஞானச் சுடர்வருக
ஒப்பில் விருத்த கிரியமர்ந்து
வாழி வருக மலைக்கரசன்
மதலாய் வருக வருகவே

வையம் புரக்கும் பழமலைக்கண்
மணியே வருக வருகவே.

**(பொ.ரை)** கடல் அலைபோல தொடர்ந்து வரும் பிறப்பை மாற்ற வருக. மும்மலம் (ஆணவம், கன்மம், மாயை) என்னும் சிறையை அகற்றி இம்மண்ணுலகில் இனிதாயின் கருப்பையில் பிறக்காமல் காப்பாற்ற வருக. குறைவில்லாத பேரருள் என்னும் செல்வம் பெருக வருக. மெய்ஞ்ஞானம் ஓங்க மௌனத்தில் நிறைந்திருக்கும் பேரின்பம் தர வருக. ஊழிக்காலம் வரினும் அதை மாற்றி குறைவில்லாத உண்மைத் தவத்தை உடையவர் உள்ளக்கோயிலில் ஒளிவீசும் ஞான விளக்கே வருக. ஒப்புமை இல்லாத திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி இருக்கும் தாயே வருக. இமயவரம்பன் குழந்தையே என்னும் பெரியநாயகியே வருக வருகவே. உலகத்தைக் காக்கும் பழமலைக்கண் வீற்றிருக்கும் மணிபோன்ற பெரியநாயகியே வருக! வருகவே! (59)

## வேறு

10. நினைய வரிய சுருதி முடியின்
நிகழு பிரம சொரூபியே
நிகழும் அறிவில் அமுதம் உதவு
நிலவு விரிவெண் மதியமே
பனையின் வளரும் மறமென் னரவு
பதற விழுநல் லசனியே
பகரும் உயிருண் மருவு மலவல்
இருளை அடுசெம் பருதியே
அனையின் அமலத் தவர்கள் பசிகள்
அகல வருநல் அமுதமே
அடியர் தவநற் பயிர்கள் தழைய
வருளென் மழைபெய் யெழிலியே
வனைசெய் கமல சரணி விரைவில்
வருக வருக வருகவே
வளரு முதிய கிரியில் அமர்பெண்
வருக வருக வருகவே.

**(பொ.ரை)** நினைப்பதற்கு அரிய வேதத்தின் எல்லையில் வெளிப்படும் பொருளே. நிகழ்கால நிரந்தர வடிவினவளே. எப்பொழுதும் அறிவின் தொகுதியாய் எல்லோருக்கும் பயன்படும் படியாக இருக்கும் வெண்நிலவே. உயர்ந்து வளரும் பயனுடைய பனை என்னும் வச்சிராயுதம் போன்றவளே. உன்னையே நினைத்துக் கொண்டிருக்கும் உயிர்களிடம் சூழ்ந்திருக்கும் மல இருளை நீக்கும் செம்மையான சூரியனைப் போன்றவளே. எல்லா தூய்மையான துறவிகள் மெய்ப் பொருளைக் காண வேண்டும் என்ற கடும்வேட்கைக் கொண்டு உன்னை நாடி வருவதற்கு துணையான அமுதமே. அடியார்களிடம் தவம் என்கின்ற நல்லபயிர்கள் வளர மழை போன்று அருள் கொடுக்கும் அழகுடையவளே. அலங்கரித்த தாமரைத் திருத்தாளினை உடையவளே பெரியநாயகியே விரைவில் வருக வருகவே. வளர்ச்சியை உடைய பழமலையில் வீற்றிருந்தருளும் பெரியநாயகியே வருக வருகவே. (60)

**வருகைப் பருவம் முடிவுற்றது.**

# 7. அம்புலிப் பருவம்

1. செம்பொன்முடி அமரர்கள் விரும்புபாற் கடலிடை
   செனித்தலாற் திருவெனுந்தன்
   சேடியொடு கூடப் பிறத்தலாற் றற்பெறு
   திருத்தாதை மரபு புவிமேற்
   பம்பிடக் குலமுதல்வ னாதலாற் தன்சேய்க்குப்
   பால்கொடு வளர்த்த பெண்கள்
   பரிவொடுந் தழுகொழுநன் ஆதலாற் றற்கொழுநன்
   பவளவார் சடைமு டியின்மேற்
   கம்பமற ஒளிவீசு கண்ணிஎன் றோவுயர்
   கலாநிதி எனத்தெ ரிந்தோ
   கைமேல் எடுத்துஉன்னை வா எனக் கூவிடக்
   கடிதவமு னென்செய் தனையோ!
   அம்புவியி னின்போல்வர் எவராக லால்விரைவில்
   அம்புலி ஆட வாவே
   அரியமுது கிரியில் அமர் பெரியநா யகியினுடன்
   அம்புலி யாட வாவே.

(பொ.ரை)

தேவர்கள் விரும்புகின்ற பாற்கடலில் பிறந்ததால், இலக்குமியாகிய தோழியோடு பிறந்ததால், நற்பேறு பெற்ற மலையத்துவச பாண்டியன் மரபில் குதிரை மேல் ஆரவாரம் செய்யும் முதல்வன் ஆதலால் முருகனுக்கு பால்கொடுத்து வளர்த்த கார்த்திகை பெண்கள் அன்போடு தழுவி நிற்றலால், சிவபெருமான் பவளம் போன்ற நீண்ட சடைமுடியின் மேல் மாறுதல் இல்லாமல் ஒளிவீசிய அழகிய உயர் கலாநிதி எனத் தெரிந்து கைதூக்கி எடுத்து உன்னை வா என அழைக்க கடுமையான தவம்முன் செய்தனையோ. இப்பூமியில் உன்னைப் போல யாராலும் ஆகமுடியாது. எனவே சீக்கிரம் அம்புலி ஆடவருவாயாக, காண்பதற்கரிய முதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியநாயகியின் உடன் அம்புலி ஆட வருவாயாக. (61)

2. விண்ணவர் குழாம்பிழிந் தூற்றி குடித்துவெளி
வீசுகோ தென்று நவகோள்
விரவும்விட வரவமுள் விழுங்கிக்கக் குச்சிட்டம்
என்றும்வீ ரக் கடவுள்காற்
கண்ணகப் பட்டுதேய்ப் புண்டனை குருத்தார
கமனஞ்செ யிழிவு மேற்றாய்
கயரோகி யாய்க்குறை வடைந்தனை இவ்விழிவெலாங்
கருதாளி தென்னா வருளோ
தண்ணறா மலர்வாய் திறந்துவா வாவெனத்
தன்கைவீ சிக்கூ வினாள்
தவமென்கொ லோநீ பிழைக்குநாள் கிட்டினது
தாமதம் உறாது விரைவில்
அண்ணல்கண்டு அகமகிழ்செய் பண்ணவி மடப்பிடியொடு
அம்புலி யாட வாவே
அரியமுது கிரியில் அமர் பெரியநா யகியினுடன்
அம்புலி யாட வாவே.

(பொ.ரை)

தேவர்கள் கூட்டம், நவகோள்கள் குற்றமென்று நீக்கி,ஏளனச் சொற்கள் கூறி வெளியே வீசவும் இராகு விழுங்கி அதனுடைய எச்சில் என்றும் தக்கன் யாகத்தில் சந்திரன் வீரபத்திரரால் தேய்வுண்டதும் பிரகஸ்பதி மனைவியுடன் இருப்பதைக் கண்ட சந்திரன் அவர் சாபத்தால் சயரோகம் அடைந்தது, இக்குற்றங்கள் எல்லாம் பெரியநாயகி பொருட் படுத்தாமல் குளிர்ச்சி பொருந்தி மலர்போன்ற வாயை திறந்து வாவெனத்தன் கைவீசி அழைத்தாள். இது தவம் என்று நீ பிழைக்கும் நாள் கிடைத்தது. தாமதம் இல்லாமல் விரைவில் சிவபெருமானைக் கண்டு உள்ளம் மகிழச்செய்யும் யாழை வெல்லும் பெண் யானை போன்ற பெரியநாயகியோடு அம்புலி ஆடவா. பெறுதற்கரிய முதுகுன்றில் அமர்ந்திருக்கின்ற பெரியநாயகியுடன் அம்புலி ஆடவருவாயாக.

(62)

3. போரேறு விண்டலம் போய்ப்புகுதி யேற்பகைப்
பொங்குமா கணம் விழுங்கும்
பொருமலை கடற்புகிற் குறுமுனிவ ருபமுனிவர்
புன்கண்வாய்ப் பட்டு மெலிவாய்
சீரேறும் எம்பிரான் செஞ்சடா டவியடையில்
செல்வியிவள் சீர் அடிகளாற்
செங்குடர் குழம்பவுதை பட்டயர்வை புவியுறிற்
செறிவளைத் தளிர்க்கை நல்லார்
ணாரேறு மார்பினும் வாயினும் மறைந்துகொடு
தாழ்ந்தவசை சொல்வ ரதனாற்
தகைமைபெறு சிவராச தானியிவள் பாலடையில்
தாழ்வொன்றும் வாராது காண்
ஆரேறு சடிலப் பிரான்மகிழ் பிராட்டியுடன்
அம்புலி யாட வாவே
அரியமுது கிரியில் அமர் பெரியநா யகியினுடன்
அம்புலி யாட வாவே.

**(பொ.ரை)**

போர் செய்ய வல்ல காளை போன்று ஆகாயத்தில் பகையால் பாம்பு விழுங்கும். கைலாய மலை கடலில் புகஇருந்த போது அகத்தியமுனிவர் பொதிகைமலை சென்று சமம் செய்தார். உபமன்யு முனிவர் துன்பப்பட்டு மெலிந்து பின் சிறப்படைந்தார். சிவபிரான் செஞ்சடையில் வீற்றிருக்கும் நீ, உமையம்மை திருவடிகளால் செம்மையான குடல் கலங்குவதைப் பட்டயர்வால் பூமியில் கலத்தலால் நல்லார் குளிர்ந்தகையால் சிவனின் மார்பிலும் வாயிலிலும் மறைந்து கொண்டு இழிச் சொல்லால் பேசுவர். அதனால் அழகுடைய சிவபெருமானின் மனைவி யானவள் சங்கினால் தாழ்வு ஒன்றும் ஏற்படாது. இது நிச்சயம். அழகான காளை வாகனம் கொண்ட சடையை உடைய தலைவன் மகிழும் பெரியநாயகியுடன் அம்புலி ஆட வருவாயாக. பெறுதற்கரிய முதுகுன்றில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய நாயகியுடன் அம்புலி ஆட வருவாயாக. (63)

4. கும்பஞ் சுமந்தமுக் கடமொழுகு களியானை
கொன்றதள் போர்த்த வெம்மான்
குடிலகோ டீரம்விட்டு இழியாது வாணிதிரு
கோதையர்கள் கைவ ருடவுஞ்
செம்பஞ்சொ டும்பனீர் கூட்டியூட் டச்சங்க
செங்கனியில் கொப்ப ளிக்குஞ்
சீரடிகள் கன்றிச் சிவந்திடச் செய்ததூஉந்
திருவுளத் தடையா துனை
நிம்பஞ் சுமந்தமலர்த் தொங்கலணி செழியர்குலம்
நீணிலத் தோங்க வரும்ஓர்
நிமலிவா வென்றுமலர் வாய்திறந் துக்கூவு
நேசமொன்றோ சமயமீது
அம்பஞ் சுடையளென வையுறேல் ஆயமுடன்
அம்புலி ஆட வாவே
அரியமுது கிரியில் அமர் பெரியநா யகியினுடன்
அம்புலி ஆட வாவே.

(பொ.ரை)

மத்தம் சுமந்த மதம் ஒழுகும் ஆண்யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்திய சிவபெருமான் கீரிடம் அணியாமல் வாணி இலக்குமி மற்றுமுள்ள தெய்வங்கள் கை தடவவும் மிருதுவான பஞ்சோடு பன்னீர் கூட்டி ஊட்டிய செங்கனியில், உன் திருவடிகள் கொப்பளித்து வீங்கி சிவந்து வரும்படி செய்தும் உன் திரு உள்ளத்தை அடையாமல், வேம்பு சுமந்த மலர் அணிந்த பாண்டிய குலம் நீண்ட நிலத்து வளர்ந்துவரும் ஒரு குற்றமில்லாத வாய்திறந்து வாவென்று அழைக்கும் அன்பு ஒன்றே காலம் இதுஎன்று அய்யமில்லாமல் கடமையுடன் அம்புலி ஆட வருவாயாக. பெறுதற்கரிய முதுகுன்றில் எழுந்தருளி அருள்பாலிக்கும் பெரியநாயகியுடன் அம்புலி ஆட வருகவே. (64)

5. மழைக்கொந் தளக்கோதை இவளாடும் முத்தநதி
மாபுண்ய மடுமூழ் கிநின்
மாறாத கயநோ யகன்றுடல் களங்கமும்
மாறிஎழில் வடிவு பெறலாந்

தழைக்குமுடல் தேய்ந்துவள ராதுமுழு மதியெனச்
சாபந் தவிர்ந்துஉய் யலாந்
தண்மலர்ப்பதச்சோங்கு பற்றியெழு பவசலதி
தாண்டியெழின் முத்தி பெறலாம்
இழைக்குங் கொடுந்தீமை வெம்பணிப் பகைநீங்கி
ஏக்கமற் றிடவாழலாம்
எங்கள்குல தெய்வமிவள் கூவினா ளிதுசமயம்
ஏழையர் தமக்க லுவலிட்டு
அழைக்குஞ் சடைப்பரம ரகமுறை துரைப்பெணுடன்
அம்புலி யாட வாவே
அரியமுது கிரியிலமர் பெரியநா யகியினுடன்
அம்புலி யாட வாவே.

**(பொ.ரை)**

தலையில் முடி அதிகமாக உள்ள கூந்தலை உடைய இவள் ஆடும் முத்தி நதியான மணிமுத்தாற்றில் சிறப்புடைய புண்ணிய மடுவில் குளித்து நீங்காத கய நோய் அகன்று உடலில் களங்கமும் மாறும். அழகான வடிவும் பெறலாம். பிறக்கும் உடல் தேய்ந்து வளராது முதுமதியென சாபத்தை தீர்த்துவிடலாம். குளிர்பொருந்திய மரக்கலம் போல உள்ளம் பற்றி எழுகின்ற எல்லாப் பாவங்களையும் இந்த மணிமுத்தாற்றில் குளித்து முத்திபெறலாம். நம்மை அண்டும் கொடுமையான தீமை, வெம்மையான வினை, பகை நீங்கி துன்பம் இல்லாமல் வாழலாம். நம்முடைய குலதெய்வமான பெரியநாயகியை அழைத்து இது தக்கநேரம் என ஏழையாகிய நமக்கு வேலை சொல்லி அழைக்கும் சடை அணிந்திருக்கும் சிவபெருமானின் அதிகாரமுடைய பெண்ணரசியாகிய பெரியநாயகி அம்மையுடன் அம்புலி ஆடவா. கிடைப்பதற்கு அரிய முதுகுன்றத்தில் அமர்ந்தருள் புரியும் பெரியநாயகியினுடன் அம்புலி ஆடவருவாயாக.(மேலும் விளக்கங்களுக்கு விருத்தாசல புராணம், தீர்த்த சருக்கம் பார்க்க). (65)

6. சித்தமுரு கிக்கசியும் எங்குமர தேவனிவள்
சேவடிநன் நிழன் மேவினான்
செய்யவிப சித்திமுனி மீண்டும் வராவழித்
திகழ்முத்தி பெற்றுஉய்ந்தனன்
முத்தமணி நதிமூழ்கி பெற்றனனொர் குருடன்விழி
மூடும்வினை யாளர் நின்போல்
மூவிரண் டறுவர்கொடு வினைநீங்கி நற்கதி
முயங்கினர்கள் இத்த லம்போற்
சுத்தமுறு மூர்த்திதல தீர்த்தமூன்று ஒத்ததுநீ
சூழுலகில் யாது உனக்குச்
சூழ்வினைகள் அற்றுசுக முறுகாலம் முற்றியது
தொல்கிரியென் னிதயம் அமர்ந்த
அத்தர்மகி ழாலய மெனக்கொண்ட அம்பிகையோடு
அம்புலி ஆட வாவே
அரியமுது கிரியிலமர் பெரியநா யகியினுடன்
அம்புலி ஆட வாவே.

**(பொ.ரை)** மனம் உருகி கசிந்ததால் எமது குருவாகிய குமாரதேவர் பெரியநாயகியின் திருவடி நன்நிழலில் சேர்ந்தார். தொண்டு செய்த விபசித்து முனிவர் மீண்டும் பிறவாத நெறியான முத்தியை பெற்றார். முத்திதரும் மணிமுத்தாற்றில் மூழ்கி குருடன் ஒருவன் கண்பார்வை பெற்றான். பாவத்தில் மூழ்கியிருந்த நின்னை போன்ற வினையாளர்கள் மணிமுத்தாற்றில் மூழ்கி நற்கதி பெற்றார்கள். சகோதரர்கள் அறுவர்கள் வினைப்பயன் காரணமாக இங்குவந்து மணிமுத்தாற்றில் நீராடி வினை நீங்கி நல்கதியை அடைந்தார்கள். இத்தலம் போல முத்தி தரும் சுத்தம் தரும் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒத்து இருப்பதை உலகம் எங்கிலும் காணமுடியாது. உனது சூழ் வினைகள் நீங்கி நலம் பெறும் காலம் வந்துவிட்டது. முதுகுன்றம் என்னும் இதயத்தில் அமர்ந்த அருநெறியில் வாழும் இன்பம் உடைய கோயில் எனக்கொண்ட பெரியநாயகியோடு அம்புலி ஆட வருவாயாக. கிடைப்பதற்கரிய முதுகுன்றத்தில் அமர்ந்தருள் புரிகின்ற பெரியநாயகியுடன் அம்புலி ஆட வருவாயாக. (மேலும் விளக்கங்களுக்கு விருத்தாசலபுராணம் விபசித்துச்சருக்கம், தீர்த்தச்சருக்கம் பார்க்க). ௬௯

7. விண்ணகத்து உறுபல்லு டுத்திரள்கள் புவியினிடை
மிளிர்முத்து எனக்கொட்டவும்
விரிபுவித் தலைவரொடு அமரர்உல கத்தர்வாள்
வெட்டுண அவர் பொற்றொ டியினார்
தண்ணறாத் தும்பைமிலை சேனையொடு அச்சேனைத்
தலைவர்படை பட்டொழிந்தே
தகர்பசுங் குடர்மூளை மச்சைநிண மொடுபச்சை
தடிநாச் சுவைத்து ருசிகாண்
வண்ணவட் டங்கொள்சே னப்பந்தர் நிழலலகை
மலிகுரவை கூத்தாடிட
வாளமர் புரிந்தெட்டு திக்குவிசை யங்கொண்டு
வண்கைலை யுங்கைக் கொள்வான்
அண்ணல்மே லமரேற்ற இவள்வெகுளி கொளுமுனே
அம்புலி யாட வாவே
அரியமுது கிரியினமர் பெரியநா யகியினுடன்
அம்புலி ஆட வாவே.

(பொ.ரை)

ஆகாயத்தில் பலவகை நட்சத்திரங்கள் உள்ளன. அவை உலகத்துக்காக ஒளிவீசி முத்து எனக் கொட்டவும், பரந்துபட்ட உலகத் தலைவரோடும் தேவர் உலகத்தில் வாழ்கின்றவர்கள் கை வளை அணிந்த மனைவிமார் குளிர்ச்சி இல்லாத போரில் அணியும் தும்பை மாலை அணிந்து படைகளோடு தலைவர் படையும் ஒழிந்ததே. செம்மறிக் கடாவின் குடல்,மூளை, கொழுப்போடு பச்சை ஊண் இவற்றை நாவினால் சுவைத்து அனுபவிக்க கூட்டமாக இரு பருந்துகளின் கூட்டத்தோடு பேய்கள் நிறைந்து குரவை கூத்தாடிட வாளால் போர்க்களத்தில் போரிட்டு எட்டுதிசையும் வெற்றி வாகைசூடி வலிமை உடைய கைலைமலையையும் கொள்வான் என்று சிவபெருமான் மேல் தேவர்கள் ஏற்றிக் கூற பெரியநாயகி கோபம் கொள்வதற்கு முன்னே அம்புலி ஆட வருக. பெறுதற்கரிய முதுகுன்றத்தில் அமர்ந்தருள் புரியும் பெரியநாயகியினுடன் அம்புலி ஆடவருவாயாக.

(67)

8. விரிவுறும் பலகோடி அண்டமிவள் செங்கைமலர்
விளையாடு பொற் கழங்காம்,
வெள்ளியுள அறுகோடி சத்தியர்கள் ஏவல்புரி
வீறுஊழி யக்கா ரராம்;
பிரிவினொடு அட்டலக் குமிகள்பா கடைகள்கைப்
பற்றவிடு தாதி யர்களாம்
பகரரிய மெய்ஞ்ஞான ஆனந்த அமுதம்இவள்
பசிதணி நறும்போசனம்
திரிவிலகு மறையின்முடி இவளரசு செய்திடுந்
திகழ்மணிச் சிங்கா சனம்,
தேக்கும்அருள் நவகோடி சித்தர்களும் இவள்முன்செல்
சேனா பதித்த லைவராம்
அரியதொரு சிவராச தானியிவள் முனியுமுன்
அம்புலி ஆட வாவே
அண்டர்புகழ் முதுகிரிப் பெரியநா யகியினுடன்
அம்புலி ஆட வாவே.

**பொ.ரை**

பலகோடி அண்டமாக விரியும் பெரியநாயகி, சிவந்த கை மலர் விளையாடும் அம்மானை ஆட்டத்தில் போடும் கழங்காய் வெற்றியுள் பலகோடி மாயசக்திகள் ஏவல்புரியும். வலிமை பொருந்திய வேலையாட்கள் அன்போடு எட்டு இலக்குமிகளும் கடை வாயில்களில் பணிபெண்கள் கைப்பற்றிவிடுவார்கள். சொல்வதற்கரிய மெய்ஞ்ஞானஆனந்தம் அமுதம் இவள் பசி தணிவதற்குரிய சிறந்த உணவு தீமை விலகிடுவது. வேதத்தின் முடிவு, இது தான் பெரியநாயகி அரசு செய்திடும் பிரகாசமான அரியணை. அருள்மிகுந்துள்ள ஒன்பது கோடி சித்தர்களும் அவள்முன் செல்ல வீரர்களோடு அலைவர், அப்படிப்பட்ட அரியவள் சிவன் இருக்கைக்குரியவள், இவள் கோபப்படுவதற்கு முன் அம்புலி ஆட வருவாயாக. உலகம் புகழும் முதுகுன்றத்தில் எழுந்த யிருக்கும் பெரியநாயகியுடன் அம்புலி ஆட வருவாயாக.
(68)

## வேறு

9. சிறுவிதித் தந்தை சிவனைஇ கழ்ந்துடல்
சிந்தித் தகரானான்
திகழுளை திருடித் தமையன் மத்தடி
சேர்ந்துரல் கட்டுண்டான்
பெறுமொரு மைந்தன் சந்திதொ றும்பெண்
பித்தொடு தனியுற்றான்
பின்னொரு தனையன் குறமகள் திருடிப்
பெருமலை குடிபோனான்
மறுவறு கொழுநன் கிழமலை யென்றுளம்
மதியேல் மதிமான் நீ
மலிமூ வுலகுச ராசரம் இவளுளம்
மருவைந் தொழிலறிவாய்
வறுமை தவிர்த்திடும் இவளுடன் ஆடிட
வாவம் பலிவாவே
வளர்முது கிரியுறை மயிலுடன் ஆடிட
வாவம் புலிவாவே.

**(பொ.ரை)**

அற்பமான புத்தியையுடைய பிரம்மா, நம் தந்தையான சிவனைக்குறை கூறியதால் ஆடுவடிவமானான், தயிரை திருடிய கிருஷ்ணன் மத்தால் அடபட்டான். உரலில் கட்டப்பட்டான். பிள்ளையார் பெண் ஆசைப்பட்டு தெருச் சந்திதோறும் தனியாக வீற்றிருக்கிறான், முருகன் வள்ளிக்காக கந்தமலையில் வீற்றிருக்கச் சென்றான். குற்றமற்ற மைத்துணன் பழமலை யென்று உளம் மதிக்காது இராதே. முழுமதியான நீ, மூவுலகும் உலாவும் பெரியநாயகி உள்ளம் ஆசைப்படும் பஞ்ச தொழில் வகையை அறிவாய். வறுமை நீங்கிடும் இவளுடன் ஆடிட வருவாய் அம்புலியே, சிறப்புற்று வரும் முதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் மயில்போன்ற பெரியநாயகியுடன் அம்புலியே ஆடிட வருவாயாக. (69)

10. ஐந்தரு நிழல்சூரர் தொழுவம ரிந்திர
னாள்பட் டந்தரவோ
அகிலம் அளித்திடு பிரம பதத்துடன்
அவர்தொழில் தந்திடவோ
செந்திரு மகண்மகிழ் விண்டு செயுந்தொழில்
செறிபதம் அருளிடவோ
செறிகயி லைக்கிரி நாயகன் ஆக்கித்
திகழைந் தொழில்தரவோ
பந்தமில் முத்திப் பதமருள் இடவோ
பக்குவர் பலர்நிற்கப்
பரிவொடு நினைவா வாவென்ற ளள்இப்
பண்ணவி அருளன்றோ
வந்தெனை வலிந்தாண் மயிலுடன் ஆடிட
வாவம் புலிவாவே
வளர்முது கிரியுறை மயிலுடன் ஆடிட
வாவம் புலிவாவே.

**(பொ.ரை)**

தேவலோகத்திலுள்ள கற்பகம், சரிச்சந்தர்ணம், தேவதாரு, மந்தாரம், பாரிசாதம் ஆகிய மரங்களின் நிழலில் வாழும் வானோர் வழிபடும் இந்திரன் ஆட்சியைக் கைப்பற்றவோ, உலகம் கொடுத்திடும் பிரம்மாவின் நிலை அவர் தொழில் நடந்திடவோ, செந்தில் முருகன் மகிழ்கின்ற, திருமால்செய்யும் தோழில் பொருந்திய பதம் அருளிடவோ, நெருங்கிய கைலை மலையின் நாயகன் ஆக்கித் திகழைத் தொழில் தரவோ, பற்று இல்லாத வீடுபேறு அருள்இடமோ, பக்குவப்பட்ட பலர் இருக்க அன்போடு நினை வா வா என்று அழைக்கின்றாள். இது பெரியநாயகியின் அருள் அல்லவா. வலிந்து வந்து நம்மை ஆட்கொள்ளும் மயில்போன்ற பெரியநாயகியுடன் ஆடிட வா அம்புலியே. வளர்கின்ற முதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் மயில் போன்ற பெரியநாயகியுடன் ஆடிட அம்புலியே வருகவே.

**அம்புலிப்பருவம் நிறைவுற்றது.** (70)

# 8. அம்மானைப் பருவம்

1. பொங்கொளி மணிச்சுடிகை வாளர வணைத்துயில்செய்
புயன்மாா் பணிந்த மணியும்
புதுமலர்ச் சோலையைந் தருநீழ லரசனமர்
பொன்னுலகின் அதிம ணியையும்
ஐங்கனல் நடுத்தவஞ் செய்அமரர் இருடிமுனி
அவுணர்முதன் மானுடர் எவரும்
அகவிச்சை உண்டெனிற் கொண்மின்என ஆங்காங்கு
அகங்கைகொடு விட்டெ றிதல்போற்
துங்கசெம் மணிகுயிற் றியகழுங் கேகத்
தொடர்ந்துநின் விழிவண்டுபோம்
தோற்றமென கருமணி குயிற்றும் மனைப்பின்
தொடர்ந்துசெல இருகைம் மலரேற்று
அங்கமல சேடியொடு சபதமிட்டு அம்மைநீ
அம்மானை ஆடி அருளே
அத்தர்முது குன்றரிடம் வைத்திடு பசுங்கொடிபொன்
அம்மானை ஆடி அருளே.

(பொ.ரை) மிகுதியாக ஒளிவீசும் தலைமணி அனைத்தும் உறங்குகின்ற தோள், மார்பு இவற்றில் அணிந்த மணியும் புதிய மலர்ச்சோலையில் ஐந்து வகை நிழல்தரும் மரங்கள் கீழிருக்கும் தேவர்கள் இந்த பொன்னுலகில் அதிக மணியையும் பஞ்சாக்கினியில் தவம் செய்யும் தேவர்கள், முனிவர்கள், ஞானிகள், அசுரர்கள் முதல் மனிதர்கள் எல்லோரும் அக ஆசை உண்டெனில் கொள்ளுங்கள் என ஆங்காங்கே வேள்வி செய்தல் போல், செம்மையான மணிகள் பதிக்கப்பட்ட கருவிகள் செல்ல தொடர்ந்து நின் பெரிய விழிகளைக் கொண்ட வண்டுகள் போகின்ற தோற்றம் போல கருமணி செல்லுதல் போல வீடுகளின் பின் தொடர்ந்து செல்ல இரண்டு கைகளிலும் மலர்களைக் கொண்டு தோழிகளோடு ஒலி எழுப்பும் பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. முதுகுன்றத்தில் எழுந்தருளி இருக்கும் சிவனாரிடம் அன்புவைத்திருக்கும் பசுங்கொடி போன்ற பெரியநாயகியே அழகு அம்மானை ஆடி அருள்வாயாக.

(71)

2. கும்பஞ் சுமந்தபுனல் கொட்டல்போ லக்கடாங்
கொட்டுங்க டாக்கரி யின்வாய்க்
கோதிலாச் சோற்றுத்திரட் கவளந் திரட்டிக்
கொடுத்தலெனை வுங்க லைமதிப்
பம்பமு தினுக்கிரையும் அமரர்க்கு வெவ்வேறு
படஅமுத கலசமி டல்போற்
பதுமக் கரந்துஞ்சி வெள்ளோதி மத்திரள்கள்
படர்விண் பரந்து செலல்போற்
செம்பொன்மணி முத்திட்டு இழைத்தபந் ததுவிண்
செறிந்து நிரை நிரையிற் செலச்
செறியொளி மணிப்பீட முற்றெறித னோக்கியெஞ்
சிவபிரான் அதிச யிப்ப
அம்பொன்மணி வளைஆர்ப்ப மலர்க்கரங் கொண்டம்மை
அம்மானை ஆடி அருளே
அத்தர்முது குன்றரிடம் வைத்திடு பசுங்கொடிபொன்
அம்மானை ஆடி அருளே.

(பொ.ரை)

தண்ணீர்மேல் கலசம் இருப்பதுபோல்ல மதநீர் வெளிப்படுத்தும் மதயானையின் வாய், பழம் முதலியவற்றில் தோல் சேர்ந்த சோற்றுத்திரள் உருண்டை கொடுத்தல் எனவும் அழகான மதி ஆராவாரிக்கும். தேவர்களுக்கு வகைவகையாக தோன்றும் அமுத கலசம் கொடுத்தல் போல தாமரையில் தூங்கும் வெள்ளைநிற அன்னக் கூட்டங்கள் படர்ந்து ஆகாயம் முழுவதும் செல்லுவது போல செம்மையான பொன்மணி முத்திட்டு செய்த பூப்பந்து ஆகாயத்தில் நெருங்கி வேகமாக திசைநோக்கிச் செல்ல நிறைந்த ஒளிமணிப்பீடம் முழுமையாக இருத்தலை நோக்கி எம்பிரான் சிவன் ஆச்சரியப்பட அம்மாவின் கையிலுள்ள பொன்மணி வளையல்கள் ஆரவாரிக்க மலர்க்கரம் கொண்டு பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. முதுகுன்றத்தின் கடவுளான பழமலை நாதரிடம் அன்புவைத்துள்ள பசுங்கொடி போன்ற பெரியநாயகியே அம்மான ஆடி அருள்வாயாக . (72)

3. கொழுந்தா மரைக் குடிகொள் அன்னமும் பேட்டினொடு
கொழுநறா வுண்டு ஏகிடுங்
குதுகுல வனத்தைவண் டைக்கண்டு அழுக்காறு
கொண்டுமற் றோர்க மலம்வாழ்
உழுங்கார்ச் சுரும்பினம் பின்தொடர்வ போலநின்
ஒண்கமல கரமுற் றெழும்
ஒண்கரு மணிப்பந்தும் ஒளிசெய் முத்துப்பந்தும்
ஒன்றின்பின் ஒன்று ஏகுதல்
செழுங்காத் தருக்கண்மொய்த் திருவண்டும் விண்ணதிச்
செறியன்ன முங்கண்டு வெஞ்
சினமுற்று எழுந்துநள் ளாறென நினைந்துபோர்
செயவெட்கி மீண்டு அடையுமால்
அழுந்தார் மணிக்கங் கணக்கரங் கொண்டம்மை
அம்மானை ஆடி அருளே
அத்தர்முது குன்றிடம் வைத்திடு பசுங்கொடிபொன்
அம்மானை ஆடி அருளே.

(பொ.ரை)

நெருங்கிய தாமரையில் வாழும் அன்னம் இனத்தோடு தேனை உண்டு அகமகிழ்வோடுதிரியும் அழகு வண்டைப் பார்த்து பொறாமைக் கொண்டு மற்றொரு தாமரையில் வாழும் ஓசை செய்து சுற்றித்திரியும் கரும் வண்டு இனத்தோடு பின் தொடர்வதுபோல உனது அழகு தாமரைக் கரமும் எழுகின்ற பொருந்திய கருமணிபந்தும் ஒளிசெய்யும் முத்துப்பந்தும் ஒன்றின்பின் ஒன்றாகப் போகுதல் செழிப்புடைய கற்பக மரத்தின் கண் மொய்த்திடும் வண்டும் ஆகாயத்தில் நெருங்கிய அன்னத்தின் முகம்பார்த்து கடுங்கோபம் கொண்டு பகைவர் என நினைத்து போர் செய்ய தயங்கி மீண்டும் தன்னிடம் செல்லும். அப்படி செல்லாதவர் அழகு மஞ்சள் காப்பு கட்டிய கரம் கொண்டம்மையாகிய பெரியநாயகியே அம்மானை ஆடி அருளுக. திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பழமலை நாதரிடம் அன்பு வைத்துள்ள பசுங்கொடி போன்ற பெரிய நாயகியே அம்மானை ஆடி அருளுக.

(73)

4. கண்ணுக்குண் மணியனைய சேடியரில் சிலர் எதிர்க்
கைப்பந்து எடுத்து ஆடநின்
கதிர்செயம் மனைபிடித்து எதிர்வீச இடசாரி
கதுவி,வல சாரி திரியா
எண்ணுக்கு அகப்படா அம்மானைஓ ராயிரம்
எடுத்துஎடுத்து எறிய விண்மீது
ஏறிநிரை நிரையாய் இருத்தல்நீ பெறும் அண்ட
எழினிரை அடுக்கொவ் வுமாற்
பண்ணுக்கு அடங்காத இசைகுறு முனிக்கையாழ்
பாடநெக்கு உருகு பொதியப்
பருமலை உதித்துத்தென் றற்குழவி விளையாடு
பைம்பொழிலில் அம்பைந் துகோத்து
அண்ணிரத இக்குவிற் குதைபூட்டி ஒலிசெய்கரம்
அம்மானை ஆடி அருளே
அத்தர்முது குன்றரிடம் வைத்திடு பசுங்கொடிபொன்
அம்மானை ஆடி அருளே.

(பொ.ரை)

கண்ணுக்குள் மணியைப் போல தோழியர்களில் சிலர் எதிர்ப்பக்கம் இருந்து கைப்பந்து எடுத்து ஆட நீ ஒளிபொருந்திய அப்பந்தினைப் பிடித்து எதிர்வீச இடதுபக்கம் வீச வலது பக்கம் திரும்பவர எண்ணுதற்கு அகப்படாமல் அப்பந்தை ஓராயிரம் முறை எடுத்து எடுத்து வீச ஆகாயத்தில் பறந்து வரிசை வரிசையாக இருத்தல் நீ பெற்றெடுத்த அண்டங்கள் அழகான வரிசையைக் கொள்ளாமல் இருந்தன. இசைக்குக் கட்டுப்படாத இசைக்குறுமுனி என்னும் அகத்தியரின் சகோட யாழில் பாட நெக்கு உருகி பொதிய மலையில் பட்டு தென்றல் குழந்தையாக விளையாடும் அழகான நிழலில் அந்தப்பந்தை பற்றி பொருந்தி கரும்பு வில்லில் முனையில் பூட்டி ஒலி செய்யும் கையையுடைய தாயே பெரியநாயகியே அம்மானை ஆடி அருளுக. திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி இருக்கும் பழமலைநாதரின் பசும்கொடி போன்ற பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக.

(74)

5. தும்பேறு வெள்விடை உகைத்தேறும் எம்பிரான்
தோற்றமுதல் ஐந்தொ ழில்செயத்
தூயசெவ் வருணின்று தோற்றிமுக் குணம்உயிர்த்
துரிசில்பர உலகுஆக்கியே
சம்பேறு பரியா தொடுக்குநா ளவ்வருட்
சார்ந்தொடுங் கிடுமுறை மைபோற்
சவிவிடுசெம் மணிதரள மணிகரு மணிகோத்துத்
தட்டும்அம் மனைகள் விண்போய்
வம்பேறு நின்கைமலர் மாறிமா றிச்சென்று
வந்தடைய நின்கொ முநனார்
வளர்பிறைச் சடைமுடிச் சிரமசைத் தங்கைவிரல்
வளர்நாசி மீதேறிட
அம்போ ருகஞ்சினவி வெம்போ ரிடுங்கைமலர்
அம்மானை ஆடி அருளே
அத்தர்முது குன்றிடம் வைத்திடு பசுங்கொடிபொன்
அம்மானை ஆடி அருளே.

**(பொ.ரை)**

கயிறு கட்டிய வெள்ளைவிடைமேல் உலாவரும் சிவபெருமான் பிறத்தல், காத்தல், ஒடுக்குதல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று ஐந்து தொழில் செய்ய தூய்மையான நன்னெறியில் நின்று செய்து உயிர்க்குக் குற்றமாகக் காணப்படும் ஆணவம் கண்மம் மாயை என்னும் மூன்றையும் மாற்றி பரந்த உலகுக்கு தர்மவிடை நீங்காது, பிரளயக் காலம் வரும் வரை சார்ந்து ஒடுங்கிடும் முறைமை போல ஒலி எழுப்பும் செம்மையான மணி, முத்து, கருமணி கொண்டு கோத்து தடைப்பட்ட அம்மனைகள் தோறும் சென்று துன்பம் இல்லாத உனது கைமலரால் மாற்றி மாற்றிச் சென்று வந்து அடைய உன்னுடைய கணவனார் (சிவன்) வளர்கின்ற பிறைச் சந்திரனைச் சடைமுடியில் வைத்து தன்னுடைய கை விரலால் மூக்கு மீதேறிடும்படி தாமரை விரிந்தது போல கோபங்கொண்டு கொடுமையான வகையில் போர் செய்யும் கையிலே மலர்கொண்டிருக்கும் பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் பழமலைநாதரின் பசுங்கொடி போன்ற பொன் வடிவான பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக.

(75)

## வேறு

6. கோங்கு முகையின் எழில் கவற்றுங்
கொம்மை முலையார் கொழுநரொடுங்
கூடி அணையில் ஊடலினாற்
குளிர்வெண் டரளக் கோதையொடும்
வாங்கு படச்செங் கண்ணரவின்
மணிமா லையையும் மனம்வெறுத்து
வண்கை மலராற் பறித்தெறியும்
மணியைச் சிறிய குருகுதருத்
தூங்கக் குயிற்றுங் குடம்பையினுட்
சுடரிட்டு இரவில் அடைகிடப்பத்
துள்ளம் மணிகள் விடும் ஒளியால்,
தூவா விகள்தா மரைகுமுதம்
ஆங்கு மலரும் வளநடுநாட்டு
அரசா டுகபொன் அம்மனையே
அமல முதுகன் றிடைவளர்பெண்
அமுதா டுகபொன் னம்மனையே.

**(பொ.ரை)**

கோங்கு மரத்தின் கூட்டம் அழுகைவருத்தும் நிலையில் பெண்கள் கணவரோடு கூடி இருக்கும் போது ஏற்படும் சண்டையினால் குளிர்த்தாமரை புரள பெண்களோடும் வளைந்த படம் சிவந்தகண் பார்வையினால் மணி மாலைகளில் மனம் சேராமல் கைகளால் மலர்களைப் பறித்து எறியும் நாரைகள் தங்கள் கூடுகளில் தூங்காமல் இரவிலே ஆங்கே அடைந்து கிடக்க, பழைய மணிகளின் ஒளிவீச்சால் தூய்மையான குளங்களில் உள்ள தாமரைப் பூக்கள் ஆங்கு மலருகின்ற வளம் பொருந்திய நடுநாட்டு அரசியே பெரியநாயகியே அம்மானை ஆடுவாயாக. குற்றமற்ற முதுகுன்றில் வளர்ந்து வருகின்ற அமுதம் போன்ற பெரியநாயகியே பொன் அம்மானை ஆடி அருள்வாயாக.

(76)

7. புறமுள் ளகப்பொற் சுளைக்கனிகள்

பொழிதேன் வாரி யலையெறிந்து

புக்குப் படப்பை நிறைந்துஉலவைப்

போத விளைசெஞ் சாலியொடுந்

திறநற் கதலி மிடறொடிக்குஞ்

செங்காய்க் குலையுங் குலைத்தெங்குந்

தீஞ்சாறு உறுஞ்செங் கரும்பினொடுஞ்

செழிய கமுகும் விண்ணளவி

மறநற் குசிலப் படையரசன்

மன்னுங் கொழுமண் டபம்பொலியும்

மணித்தூண் டோறு நாடிமனம்

மகிழ அதனை அலங்கரிக்கும்

அறமார் வளஞ்சேர் எழினடுநாட்

டரசா டுகபொன் அம்மனையே

அமல முதுகுன் றிடைவளர்பெண்

அமுதா டுகபொன் அம்மனையே.

**(பொ.ரை)**

பலாச் சுளைகளில் உள்ள கனியான தேனை சொரிவதால் நிலங்கள் நனைந்து கிடக்க அங்கு செந்நெல்களும் விளைந்து கிடக்கின்றன. அதோடு நல்ல வாழை மரத்தில் குலையும், தென்னை மரமும் சாறு அதிகமாக கிடைக்கும் கரும்பினோடு நிறைந்த கமமும் வானாளாவி வளர்ந்துள்ள வச்சிராயுத படையையுடைய அரசன் அவனது மண்டபம் சிறப்பாக விளங்குகிறது. தூண்கள் மணம் வீசுகின்றன, மக்கள் மகிழ அலங்கரிக்கும் அறத்தையுடையோர் வளர்சேர்ப்பர். அப்படிப்பட்ட அழகிய நடுநாட்டில் எழுந்தருளியிருக்கும் பெரியநாயகியே அம்மானை ஆடுவாயாக, குற்றமற்ற முதுகுன்றத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் அமுதம் போன்ற பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. (77)

8. களபக் குழம்பாற் றொய்யில்வனை

கதிர்மென் முலையார் குழற்பொதியுங்

கந்த மலர்த்தேன் காமலர்த்தேன்

கவர்வாய் குடித்துக் குமட்டளிகள்
தளவ முறுவற் றையலர்கள்
தண்ணீ ராடத் தடமுலைமேல்
தங்குங் கலவைக் குழம்புமணஞ்
சார்ந்தோட் டெடுத்தா றலையெறிந்து
வளநெற் பழனம் பாய்ந்துமறை
மலர்த்தா துகுத்து முப்புடைக்காய்
வாரி எடுத்துச் சென்றுகடல்
வயிறு தூர்த்துஅங்கு அதன்ஆழத்து
அளவைக் குதைக்குஞ் செழுநடுநாட்டு
அரசா டுகபொன் அம்மனையே
அமல முதுகுன் றிடைவளர்பெண்
அமுதா டுகபொன் னம்மனையே.

**(பொ.ரை)**

களபத்தால் உடம்பில் சாந்து சாற்றியுள்ள இளம்பெண்கள் நீண்ட கூந்தலில் தேன் உள்ள கந்தமலர், சோலை மலர் இவற்றிலுள்ள தேனைக் குடித்த வண்டுகள் வெண்பல்லுகளுடன் சிரிக்கும் ஆடவர்கள் நீராடத் தலைவிகள் மேல் உள்ள கலவை, குழம்பு சார்ந்த மணப் பொருட்கள் எல்லாம் எடுத்து எறிந்து வளம் உடைய நெற்பழனம், தாமரை மலர், தேங்காய் போன்றவற்றை வாரி எடுத்துச் சென்று கடல்தூர்த்து அங்குள்ள ஆழத்தின் அளவைக் குறைக்கும். அப்படி செழிப்புடைய நடுநாட்டில் எழுந்தருளி அருள்பாலிக்கும் பெரியநாயகியே அம்மானை ஆடி அருய்வாயாக, குற்றமற்ற திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் அமுதம் போன்ற பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. (78)

## வேறு

9. செம்மலர் நின்கை எறிமுத் தம்மனை
சேல்விழி ஒளிதோயத்
திகழ்மற் றொருகைக் கருமணி அம்மனை
திருநகை யொளிகதுவக்
கொம்மைமென் முலையார் சிலர்வெண் முத்து

குயிற்றிய தென்பர்சிலர்
கொழுவிய நீலம் இழைத்தன என்றுங்
குளறுவர் நிலையறியார்
தம்மனம் ஒப்ப உரைப்பார்கள் அன்னிய
சமயர்கள் மெய்ப்பொருளைச்
சதுமறை தந்திர சைவந் துணிபொருள்
சார்அக் கரமெவையும்
அம்முதல் கொளல்போல் உறைசிவன் மகிழ்பெண்
ஆடுக அம்மனையே
அணிமுது கிரிகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே.

**(பொ.ரை)**

அழகான மலர் போன்ற உன்னுடைய ஒரு கையில் முத்தாலாகிய அம்மானைக் காய் உள்ளது. மற்றொருகையில் அழகான கண்களில் ஒளிவீசும் நீலமணிகளாகி அம்மானைக் காய் உள்ளது. சிரிப்பு ஒலி உடைய பெண்கள் சிலர் இதை வெண்மையான முத்துபதித்தது என்பர். சிலர் அழகிய நீலம் இழைத்தன என்றும் உளறுவர். உண்மை நிலை அறியார், அவரவர் எண்ணத்திற்கு ஏற்ப சொல்லுவார்கள். பிற சமயத்தவர்கள் மெய்ப்பொருளை, வேத ஆகமாங்ளைத் தந்திரம் என்றும் சைவர் உண்மைப் பொருள்களைச் சார்ந்து அகர முதல எழுத்தெல்லாம் முதலாகக் கொள்ளுதல் என்றும் கூறுதல் போல அத்துவிதமாக உள்ள சிவன் எழுந்தருளி மகிழ்ச்சியுற பெரியநாயகியம்மையே அம்மானை ஆடுக. அழகான முதுகுன்றில் எழுந்தருளியுள்ள கல்யாண அழகுவடிவு கொண்ட பெரியநாயகியான சுந்தரியே (பார்வதியே) அம்மானை ஆடி அருள்வாயாக. (79)

10. பண்ணக லாஅளி இமிர்குழ லாய்!எறி
பருமுத் தம்மனைவிண்
படருதல் சிற்கக னத்திரு மேனி
படைத்திடும் எம்பெருமான்

தண்ணொளி விடுமுத் தார மெடுத்தவர்
தடமார் பிடல்போலாந்
தகுபல விதமணி அம்மனை விண்ணில்
தாவி எடுத்தெறிதல்
கண்ணிய உள்ளக் காதலை ஓதிக்
கரும முடித்து வரக்
கைவளர் அன்னாங் கிளிகுயில் தூதுக்
காவிடல் மானும், மலர்
அண்ணிய கலைவா ணித்திரு சகியோடு
ஆடுக அம்மனையே
அணிமுது கிரிகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே

(பொ.ரை)

இசையோடு வண்டுகள் ஒலிப்பது போன்ற கூந்தலை உடையவளே.வீசுகின்ற பெரிய அம்மானை காய்களை ஆகாயத்தில் வீசுவது சிதாகாயத்திருமேனி படைத்தாடும் சிவபெருமான் குளிர்ச்சியான ஒளிவிடும் முத்தாரம் அணிந்த பெண்கள் போல தகுதியுடைய பலவிதமான அம்மானை காய்களை ஆகாயத்தில் தாவிபிடித்து எறிதல் தூய்மையான உள்ளக் காதலைக் கூறி செயல் முடித்து வரும்கை. வளையலையுடைய அன்னம் போன்று கிளி, குயில் தூதுக்காக விடும் மானும் மலரில் வாழும் கலைவாணி திருமகளோடு அம்மானை ஆடுவாயாக. அழகிய முதுகுன்றில் எழுந்தருளி இருக்கும் கல்யான அழகுவடிவு கொண்ட பெரியநாயகியே அம்மானை ஆடி அருள்வாயாக. (80)

**அம்மானைப் பருவம் நிறைவுற்றது.**

# 9. நீராடற் பருவம்

1. செந்தாரப் பசுங்கிளி மொழிக்கோதை நின்னெழிற்
திருமேனி விரிஒளியினாற்
சேயொளிய பவளக் கொடிப்பசுங் கொடியாத்
தெண்ணிலவு விரிமுத்தமும்
நந்தார் மரைச்செமல ருங்குமுத முஞ்சாங்கும்
நனியொளிய மரகதமதாய்
நாகிளவெ ளன்னங் கலாமஞ்ஞை யாமெங்கும்
நாடியலை யச்சேவல்கள்
கொந்தார் குழற்பெண்கள் குடமுலை அணிந்தகத்
தூரிகற் பூரகளபங்
குழையக் கரைத்தோடி காளிந்தி வாணிவிசை
கொண்டகங் காநதியதாம்
வெந்தாடு முத்திபெறு முதுகிரிப் பெண்ணரசி
வெள்ளநீ ராடி அருளே
வித்தகர்கள் நத்துமணி முத்தநதி யுற்றபுது
வெள்ளநீ ராடி அருளே.

**(பொ.ரை)** கழுத்தில் செவ்வரி உள்ள பசுங்கிளிபோல பேசும் பெண்ணே, உன்னுடைய அழகிய திருமேனியில் விரித்து ஒளியினால் சிவப்பு நிறம் பொருந்திய பவளக்கொடிப் பசுங் கொடியாக குளிர்ச்சியான நிலவு விரித்தமுத்தமும் வளரும் தாமரை மலரும் சங்கும் ஒளி பொருந்திய மரகதமாய் இளம் அன்னம், மயில் எல்லாம் எங்கும் ஆசையோடு உலவ, சேவல்கள் முடிச்சுருள் உள்ள பெண்கள் அணிந்துள்ள கத்தூரி, கற்பூரம், சந்தணம் இவற்றைக் கரையச் செய்து, யமுனை, சரசுவதி போன்ற நதிகளைக் கொண்ட கங்கா நதி முதலானவற்றில் நீராடி முத்திபெறுவதற்குரிய முதுகுன்ற பெண்ணரசியாகிய பெரியநாயகியே வெள்ளநீராடி அருள்வாயாக. ஞானிகள் விரும்பி மணிமுத்தாற்றில் வரும் புதுநீரில் பெரியநாயகியே நீராடி அருள்வாயாக. (81)

2. கைம்மலர் அணிந்தவளை நீரைகலீர் என்றுஅலறக்
கரியவிழி செவ்வி ழியதாய்க்
காட்டிடச் செம்பவள இதழ்வெண் ணிறங்கொளக்
கற்றைக் குழல்ச ரியவே
மெய்ம்மறைகள் நான்கும்நெடு நாட்டேடி யுங்கண்டு
மேவொணாப் பரமன் உருவின்
மேமுத்து முத்தா எழுந்த ஆனந்தகுறு
வெயர்வையுயிர் மேற் கருணையாற்
பொய்ம்மலியும் உலகில் உறு சரவசர உயிரெலாம்
போந்தாடி நற்க திபெறப்
புவியிடைக் கைமலர் எடுத்திடப் புண்ணியம்
பொலியும்மணி முத்தா நதியாய்
வெய்யபவ நோய்நீக்கு முதுகிரிப் பெண்ணரசி
வெள்ளநீ ராடி அருளே
வித்தகர்கள் நத்துமணி முத்தநதி உற்றபுது
வெள்ள நீராடி அருளே.

(பொ.ரை)

கைகளில் மலர் அணிந்தவளை அஞ்சும்படி செய்ய அதனால் கரியகண்கள் செம்மையாக மாறி, பவளம் போன்ற இதழ் வெண் நிறம் பெற்று நெருங்கிய கூந்தல் சரிந்தது. உண்மையான நான்கு வேதங்களைப் பல நாட்கள் தேடியும் கண்டு அறிய முடியாத சிவன் உருவம்மேல் முத்துமுத்தாக எழுந்த ஆனந்தம் கொண்டு உயிர்மேல் கருணை கொண்டு அழியக்கூடிய உலகம்படும் அசையும் உயிர்கள் எல்லாம் ஆடிதிரிந்து நல்லமுறையில் திருவடி அடைய எல்லா மக்களுக்கும் புண்ணியம் கொடுக்கும் மணிமுத்தாறாய் கொடிய பாவங்களை நீக்கும் முதுகுன்ற பெண் தலைவியாகிய பெரியநாயகியே நீராடி அருள்வாயாக. ஞானிகள் விரும்பும் மணிமுத்தாற்றில் வரும் புதிய வெள்ளத்தில் பெரிய நாயகியே நீராடி அருள்வாயாக. (82)

(பார்க்க: விருத்தாசல புராணம், தீர்த்தச் சருக்கம்).

3. சூழையோ லிடும்வண்டு மலரே லிடத்திரை
கொழித்தோ லிடுஞ் சங்கினங்
கொங்கைகள் அசைந்தாட மாற்றேறு பூனதங்
கொண்டெழில் பெறச் செய்திடும்
இழையாட கேசபா சத்தினொடு சைவலம்
எழுந்தாட விழியி மைபொரூஉடம்
இகுளையர்க ளோடியாடிப் பிடித் தன்னாங்கள்
ஏந்திவிளை யாடி டச்சேல்
மழையா ரிடந்துள்ளிப் புயலகடு கீண்டேகி
வான்றரு வொடித்தெட் டிவிண்
மன்னுதெய் வக்கங்கை ஆடிமீ ளுந்திவ்ய
மணிநதி அலைக் கரத்தால்
விழைவால் அழைத்தெறியும் முதுகிரிப் பெண்ணரசி
வெள்ளநீ ராடி அருளே
வித்தகர்கணத்துமணி முத்தநதி யுற்றபுது
வெள்ள நீராடி அருளே.

**(பொ.ரை)** கடல் சூழ்ந்துள்ள பகுதியில் உள்ள மலர்களில் வண்டுகள் ஒலி எழுப்பும் கடற்கரையில் சங்குகள் அதிக ஒலி எழுப்பும் இப்பகுதிகளில் மகளீர்கள் கொங்கைகள் அசைந்தாட உயர்ந்த ஆபரணங்களை அணிந்து அழகுபெறச் செய்திடுவர். அணிகலன்கள் ஆட கேசாதி பாதத்துடன் (தலைமுதல் கால்வரை) கரிய மணிஅசைய விழி இமையோடு போரிடும், தோழியர்களோடு ஆடிப் படித்து அன்னாங்களை ஏந்தி விளையாடி, மழை மேகத்தில் துள்ளி, காற்று அதிகமாக வீச வானளாவிய மரங்கள் ஏமாற்றும் வண்ணம் விண்தொடும். தெய்வக் கங்கையில் ஆடிவரும். திரும்பவும் சிறப்புடைய திருமணி முத்தாற்றின் அலையின் பயனால் அழைக்கும் முதுகுன்றத்தில் எழுந்தருளி இருக்கும் பெண்ணரசியான பெரியநாயகியே வெள்ள நீரில் நீராடி அருள்வாயாக. ஞானிகள் எழுந்தருளியிருக்கும் மணிமுத்தாற்றங்கரையில் அருள்பாலிக்கும் பெரியநாயகியே புதுநீரில் நீராடி அருள்வாயாக. (83)

4. புத்தமுதம் உண்டுஉலவு தெய்வமட வார்இரு
புறஞ்சூழ்ந்து வர எழிற்செம்
புண்டரிக வட்டவனை ஒலிமாதர் கைநினது
பொன்மேனி மாசு தீர்ப்பச்
சுத்தமுது திருமேனி பொதிகளப குங்கும
சுகந்தசந் தனமும் அளவளாந்
தோயங் கருங்கடற் செங்கடல தாக்கமதி
தோன்றுசெம் பருதி யேய்ப்பக்
கொத்துமலர் தேமாங் கனிகதலிக் கனியுங்
கொழுநறவு வயல் பாய்ந்திடக்
கொழுவிவளர் செஞ்சாலி கதிரிரவி கடவுட்குக்
குளிர்கா லெடுத்து வீசும்
வித்துருமம் ஒத்தசடை முதுகிரிப் பெண்ணரசி
வெள்ளநீ ராடி அருளே
வித்தகர் கணத்துமணி முத்தநதி உற்றபுது
வெள்ள நீராடி அருளே.

(பொ.ரை) புதிய உணவு உண்டு திரியும் தெய்வப் பெண்கள் இரண்டு பக்கமும்வர அழகிய செம்மையான தாமரை குளத்தில் பாடல் பாடும் பெண்கள் மீது நின் கை படும் போது குற்றங்கள் தீர்ந்து விடும். அப்படிப்பட்ட சுத்தவயதான உடம்பில் களபம், குங்குமம், சந்தனம் கலந்த நீரை உடம்பில் தேய்க்கும். அதனால் கருங்கடல் செங்கடல் ஆக்க சந்திரன் தோன்றும். செம்பருத்தி மலரை ஒத்த சிவப்பு நிறம் தோன்ற கொத்துமலர், தேங்காய், மாங்கனி, வாழைப்பழம், தேன் இவை வயல்களில் சேர்ந்திட இழுத்து வருகின்ற செந்நெல் கதிர் சூரியக் கடவுளுக்கு குளிர்ந்த காற்றாய் வீசுகின்ற பவளம்ஒத்த கடை அணிந்த முதுகுன்றத்துப் பெண்ணுக்கு அரசியே பெரியநாயகியே மிகுந்த நீரில் நீராடி அருள்வாயாக. ஞானிகள் கூட்டமாக எழுந்தருளியிருக்கும் மணிமுத்தாங்கரையில் அருள்பாலிக்கும் பெரியநாயகியே புதுநீரில் நீராடி அருள்வாயாக.

(84)

5. வீடுறுநல் எந்தாய்நீ ஆடும்இத் துறையெம்மான்
பிட்டுக்கு மண்சு மந்து
பிரம்படியும் உற்றவிடம் இதுவெனச் சுட்டிததிருப்
பெண்சகிகை காட்ட விரலால்
வாடுறு முகத்தினொடு மனம்நொந்து கண்கணீர்
மாலைமுத் தாகக் கொட்டியே
வாவென்று கொழுநரொடும் மைந்தரொடும் இத்தலம்
அடைந்ததென் மாதவ மலோ?
கூடும்உயிர் யாவைக்கும் அருளால் வலச்செவிக்
கொளஐந் தெழுத்து உரைத்துக்
கோதில்அரி அயன்அமரர் குலவிடும் பொன்னகர்க்
குடியேற்றி வைப்பது மலால்
வீடுஉத வுங்கருணை முதுகிரிப் பெண்ணரசி
வெள்ளநீ ராடி அருளே
வித்தகர்கணத்துமணி முத்தநதி உற்றபுது
வெள்ள நீராடி அருளே.

**(பொ.ரை)** வீட்டு பேற்றைக் கொடுக்கும் சிவன் ஆடும் இத்துறை சிவன் பிட்டுக்கு மண் சுமந்து, மாணிக்கவாசர்க்காக பிரம்படியும் பெற்ற இடம் இதுவெனக் காட்டி, திருமங்கை விரலால் சாடைக்காட்ட, வாடுகின்ற முகத்தினொடும் மனம் வாடி கண்களில் நீர் மாலை மாலையாக முத்துமுத்தாக அழுது வாருங்கள் என்று கணவனோடும் குழந்தைகளோடும் இந்த தலம் அடைந்தது நல்ல புண்ணியம் அல்லவா. அப்படி எல்லோரும் இறைவனடி சேரும் வண்ணம் இங்கு உயிர்விடும் எல்லார்க்கும், சிவன் வலது காதில் ஐந்தெழுத்தைக் கூறி பிரம்மன், திருமால், தேவர்கள் வாழும் பகுதியில் குடியேற்றி வைப்பது அல்லாமல் அவர்களுக்கு முத்திக்கு உதவும். இப்படிப்பட்ட அன்புடைய முதுகுன்றத்துப் பெண்களுக்குத் தலைவியே பெரியநாயகியே வெள்ள நீராடி அருள்வாயாக. ஞானிகள் கூட்டம் உள்ள மணிமுத்தாற்றின் வரும் புது வெள்ளத்தில் பெரியநாயகியே நீராடி அருள்புரிவாயாக.

(85)

## வேறு

6. கொலைவாள் விழியினைக் கண்டு வெருண்டு
குதிசேல் விண்ணேறக்
கொழுமுத் தாரங் கண்டுக மஞ்சூற்
குடவளை கரையேறத்
தலைமைக் கொழுமணி இழைகுழை தோடுறு
தாழ்செவி இணைகண்டே
தழையத் தழைவள் ளைக்கொடி அஞ்சித்
தண்பசு முகம்வாட
அலைபுனல் ஆடிடு கூந்தலினைக் கண்
டசைசை வலமோட
அண்ணிய புற்புதம் முலையெழில் கண்டுதன்
அங்கமு டைந்தோடத்
தொலைவில் பதந்தரு புண்ணிய மடுநற்
றுறைநீ ராடுகவே
தொன்முது கிரிமணி முத்தா நதிபொற்
றுறை நீராடுகவே.

(பொ.ரை) கொல்கின்ற வாள் போன்ற கண்களை உடைய வளைக்கண்டு அச்சப்பட்டு கடந்து போகின்ற வேலை உடையவர்கள் விண்செல்ல, பெரிய முத்துமாலையைப் பார்த்து நிறைந்த கர்ப்பம் உள்ள வாளை கரையேற, தலைவர் தலை உச்சியில் அணியும் அலங்காரமான அணிகலன்களை, இரண்டு காதுகளிலும் தோடு அணிந்திருப்பதைக் கண்டு பச்சிலைகள், வள்ளைக்கொடி அஞ்சிட குளிர்ந்த உயிரின் முகம்வாட அலைகள் உள்ள நீரில் ஆடுக. கூந்தலினைக் கண்டு அசைய பாசிநீங்க பக்கத்தில் உள்ள நீர்க் குமிழ் பெண்களின் அழகைக் கண்டு தன் உறுப்புகள் அசைந்து ஓட ஒப்பற்ற பதவியான முத்திதரும் மணிமுத்தாற்றின் புண்ணிய மடுமென்னும், நல்ல துறையில் நீ நிராடுக. காலம் வரையறுத்துக் கூறமுடியாத பழமையான முதுகுன்ற மணிமுத்தாறு நதியின் பொன் போன்ற துறையில் பெரிய நாயகியே நீராடுகவே. (86)

7. நீர்ப்பூங் கொடிமலர் கொய்து தொடுத்திடு
நிறைநறை தொடையினொடு
நேயத் தோள்தீட் டியசிந் துரமு
நிகழிரு கொங்கையின்மேற்
கோற்பூ விற்கொடி தீட்டிய தொய்யிற்
குடைபுனல் கொள்ளைகொளக்
கொடியிடை புனைநுண் டுசு நனைந்து
குவிதன மூதலுருவச்
சீர்ப்பொலி அழகெம் மையன் விழிக்குச்
செல்வ விருத்திடுமாற்
சேயிதழ் வெளிறக் கண்கள் சிவப்பச்
செறிசே டியர்கள்குழாந்
தோற்புற வம்பிகை புண்ணிய மடுநற்
துறைநீ ராடுகவே
தொன்முது கிரிமணி முத்தா நதிபொற்
றுறைநீ ராடுகவே.

**(பொ.ரை)**

நீர்மலர்களின் பூக்களைப் பறித்து தொடுத்து அதிகமான மணமுடைய பூங்கொத்தினோடு புயங்களில் தீட்டிய சிவப்பும் இரண்டு கொங்கையின்மேல் பூக்களை வரைந்தும் கோலம்இட்டும் நீர்கொள்ளும் அளவுக்கு கொடிபோன்ற இடையில் வரையப்பட்ட துணியை நனைத்து கூப்பிய மார்பகங்கள் பூரித்து உள்ள வடிவில் அழகுபொலியும் எம் சிவபெருமான் பார்வைக்கு சிறப்பு விருந்து கொடுக்குமாறு பெண்கள் வெறுக்க கண்கள் சிவக்க நெருங்கிய பணிப் பெண்கள் கூட்டம் பின்வாங்க பெரியநாயகியே முத்திதரும் புண்ணிய மடு என்னும் புண்ணிய துறையில் நீராடுவாயாக. காலம் வரையறுத்து கூற முடியாத அளவுக்குப் பழமையான முதுகுன்ற மணிமுத்தாநதியின் புண்ணிய மடுவி என்னும் பொன் துறையில் பெரியநாயகியே நீராடி அருள்வாயாக.

(87)

8. அஞ்சிறை அன்னம் பலசூழ் தரநடு
ஆடு மயிற்போலும்
அவிரும் உடுக்கண நடுவிற் பொலிதரும்
அழகுவெண் மதிபோலும்
வஞ்சியர் சூழ்தர நடுவண் முளைத்திடு
மரகதக் கொடிபோலும்
வாங்குங் கொடியிடை வீக்கிய மேகலை
வடிவி னொதுங்கியிட
விஞ்சிய வானவர் தானவ ரிருடிகள்
வியன்மா தவர்புவியோர்
விழைவொடும் அரஓம் அரஎன மூழ்கிடு
மிகுபே ரொலிமேவுந்
துஞ்சலி லம்பிகை புண்ணிய மடுநற்
றுறைநீ ராடுகவே
தொன்முது கிரிமணி முத்தா நதிபொற்
றுறைநீ ராடுகவே.

**(பொ.ரை)**

அச்சப்படுகின்ற அன்னம் பல சூழ்ந்திருக்கின்ற போது நடுவில் ஆடும் மயில்போலவும் பிரகாசிக்கின்ற நட்சத்திர கூட்டத்தின் மத்தியில் அழகிய வெண்மையான சந்திரனைப் போலும் வஞ்சிக்கொடி சூழ்ந்திருக்கின்ற போது நடுவில் முளைத்திருக்கும் மரகதக் கொடிபோலும் எல்லாம் தாங்கிக் கொள்ளும் கொடி போன்ற இடையில் பெருத்தமேகலை தன்னிலையிலிருந்து ஒதுங்கிவிட அதனை விஞ்சிய தேவர்கள், தானவர்கள், இருடிகள், அதிக தவத்தை உடையவர்கள், பூமியில் உள்ளோர் மகிழ்ச்சியோடும் **'அரஓம்அர'** என ஒலி எழுப்பி மணிமுத்தாற்றில் குளிக்கும் மிகுந்த ஒலிகேட்கும். உறக்கமில்லாத பெரியநாயகியே புண்ணிய மடு என்று கூறப்படும் புண்ணிய துறையில் நீராடுக. தொன்மையான முதுகுன்ற மணிமுத்தாற்றின் புண்ணிய துறையில் பெரியநாயகியே நீராடுவாயாக.

(88)

## வேறு

9. தொய்யின் முலைப்பொற் குடங்கொண்டு
 தூநீர் நீந்தி விளையாடுந்
துணைச்சே டியர்மேற் பசுமஞ்சட்
 சுண்ண மெறிய வறச்சேக்குஞ்
செய்ய கரையி னிளைஞருளஞ்
 செறியுங் காமக் கனன்மூட்டச்
செறிநீ ரொத்தி யுலர்குழற்குத்
 திவ்ய மணஞ்சேர்த் தூட்டுபுகை
துய்ய கதலிக் காடடையத்
 தொங்குங் குலைக்காய் பழுத்துமிகச்
சொரிதேன் அருவி பாய்ந்துவயற்
 சோராச் செந்நென் மிகவிளையும்
பொய்யில் தவர்சூழ் புண்யமடுப்
 புதுநீ ராடி அருளுகவே
பொற்பார் விருத்தாம் பிகையம்மே
 புதுநீராடி அருளுகவே.

**(பொ.ரை)** மாறாத கொங்கையர்கள் பொன் குடம் எடுத்து வந்து தூய நீரில் நீச்சலடித்து விளையாடுவர். துணைக்காக வந்த பணிப்பெண்கள் மேல் பசுமையான (சுண்ணத்தை) வாசனை பொருட்களை எறிய பளப்பளப்பான வனப்பு உடல் தழும்ப கரையில் இருக்கும் இளைஞர்கள் உள்ளம் நிறைந்து, நீரை துவட்டி, கூந்தலை உலர வைத்து சிறந்தமணம் சேர்க்கும் புகை ஊட்டி பக்கத்திலுள்ள வாழைத் தோட்டத்தை அடைவர். அங்கு தொங்கும் குலையிலுள்ளவை பழுத்து மிகுந்த தேன் சொரியும். அவை அருவியல் பாய்ந்து வயலில் சேரும். செந்நெல் மிகவிளையும். உண்மை தவத்தவர்கள் வாழ்ந்திருக்கும் புண்ணிய மடுவில் புது நீராடி அருள்வாயாக. பொன்போன்ற பார்வையை உடைய பெரியநாயகி அம்மையே இக்கணமே புது நீராடி அருள்புரிவாயாக. (89)

10. வள்ளக் கமல மலர்மலர்த்தும்
வானா ரிரவி தனைவிரும்பா
வடிவார் பொன்னாட் டுலவு தெய்வ
மடவார் தொடுத்துச் சூட்டுநறா
வெள்ளம் பெருகம் மாலைபொதி
வியன்றோட் கொழுந ரொடும்பவனி
வீதி வரவிந் நகர்மடவார்
வெண்ணுண் டூசு மிகநனைய
உள்ளங் கவற்றுந் தனமுதலா
முறுப்பெல் லாமும் வெளியாக
வொண்கைம் மலராற் கண்புதைப்ப
உந்திக் குதிக்குஞ் சேற்சிறகர்ப்ப
புள்ளு மகிழும் புண்யமடுப்
புதுநீ ராடி அருளுகவே
பொற்பார் விருத்தாம் பிகையனமே
புதுநீ ராடி அருளுகவே.

(பொ.ரை)

வட்டில் போன்ற தாமரை மலர்களை விரியச் செய்யும் ஆகாய சூரியன் தனை விரும்பி வடிவம் கொண்டு நாட்டிலே உலாவும். தெய்வப்பெண்கள் வரிசையாக தொடுத்து தேன் வெள்ளம் பெருக்கும். மாலை நேரம் பொதிகைமலையில் தன் கணவருடன் வீதிஉலா வருவது தேவலோகப் பெண்கள் வெண்மையான உணவு, ஆடை அதிகமாக அணிந்த ஆடை நனைய உள்ளம் வாட்டும். கொங்கை முதலான எல்லா உறுப்புகள் வெளிப்படையாக தன் ஒளிமையான கையால் சிவபெருமான் கண்ணை விளையாட்டாக மூட துள்ளிக் குதிக்கும் சிறகை உடைய அன்னம் மகிழும் புண்ணிய மடுவின் புது நீராடி அருள்வாயாக. பொன் போன்ற மனம் உடைய பெரியநாயகி தாயே புதுநீராடி அருள்வாயாக. (90)

**நீராடற் பருவம் நிறைவுற்றது.**

# 10. பொன்னூசற் பருவம்

1. பாயொளி பழுத்தபவ ளக்கா னிறுத்திமிசை
பருவச்ர விட்டம் இட்டுப்
பகரருண கிரணரத் னப்பலகை நடுஇட்டுப்
பருவவெண் முத்துத் தாம்பாற்
தூயொளி விரிந்திட அசைத்துவிண் தருநிகர்த்
துறுவெள்ளிச் சினைதூக் கியே
துன்னுமந் தாரமிரு வாட்சிமல் லிகைமுல்லைத்
தூமலர்த் தொடைக ணாற்றி
நேயமொடு கலைவாணி இசைபாட திருவிந்தரை
நின்றுஉதைந் தாட விருபால்
நெக்குருதி அன்பால் இசைத்தவிப் புன்கவியின்
நீள்செவி யிடுந்த மிழ்த்துறைப்
போயபூங் கொடி, உயிர்க டோறுநின் றாட்டுபவள்
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூச லாடி யருளே.

**(பொ.ரை)** ஒருவகை பழுத்த பூண்டிலிருந்து வரும் ஒளியானது உறுதியான உத்திரம் இட்டு இருப்பது போல சொல்லத்தகுந்த சூரியகிரகண சூவாலைகள் பலகையிட்டு பருவக்கால வெண்முத்து தருகின்ற தூய ஒளி எல்லா இடமும் பட்டு தரக்கூடிய நிகரில்லாத நெருங்கிய வெள்ளி ஊஞ்சல் தண்டை தூக்கியே செல்லும் மந்தாரம், இருவாட்சி, மல்லிகை, முல்லை போன்ற தூய மலர்கள் கொண்டு மாலைகள் கட்டி அன்புடன் சரசுவதி இசையோடு பாட, இலக்குமி பொன்னுஞ்சலை ஆட்ட, ஆசையுடன் நெஞ்சம் உருகி அன்பால் பாடிய இந்தப்பிள்ளைத் தமிழ் பாட்டினை நின் செவியிடும், செந்தமிழ் உணர்வுடைய பூங்கொடியே, உயிர்கள் தோறும் நின்று இயக்குபவளே பொன்னுசல் ஆடிஅருள்வாயாக. சிறப்புடைய பழமலைநாதரின் அழகினுக்கு ஒத்த மயில் போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக.

(91)

2. ஐம்பான் முடித்தமலர் வண்டாடத் துடியிடை
அசைந்தாட வவிரு மணிமுத்
தாரமுடன் மாணிக்க மாலைவெயில் விட்டாட
ஆதிசுரர் கொண் டாடவே
வம்பாரு நின்மேனி மரகதப் பாசொளி
மலர்ந்தெண் டிசைப்பர வலால்
வையமுழு தும்நினது திருமேனி என்றுமறை
வாழ்த்துதல் வெளிப் பட்டதால்;
அம்பார் சடைப்பிரான் விழியுங் கருத்தும்நின்று
ஆவலொடு ஊசல் ஆட
அக்குநெக் கிட்டுருகும் மெய்யன்பர் ஏழ்பிறவி
ஆழ்கட லுறாத ருள்ததும்
பும்பாத நன்கல னளிக்கும்விர்த் தாம்பிகைப்
பொன்னூசல் ஆடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

(பொ.ரை) கூந்தலில் அணிந்துள்ள கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ, நிலப்பூ ஆகிய மலர்களில் உள்ள வண்டுகள் ஆட, உடுக்கை போன்ற இடை அசைந்தாட, பற்றி இருக்கும் மணிமுத்தாரமுடன் மாணிக்க மாலை ஒளி விட்டாட, சிவபெருமான் கொண்டாடவே, தியோனின் திருமேனி மரகத ஒளி (பாசொளி) விரிந்து எண்டிசையும் பரவுவதால் உலகம் முழுவதும் சத்தியின் தோற்றம் என்று வேதங்களின் வாழ்த்துதல் வெளிப்படுவதால், பாதிரிப் பூவை சடையில் அணிந்த சசிபிரான் பார்வையும் கருத்தும் சேர்ந்து ஆசையுடன் ஊஞ்சல் ஆட, எலும்பு நெக்கு நெக்கு உருகும் மெய்யன்பர்கள் ஏழு பிறவியிலும் அருளானது பிறவிப் பெருங்கடலை நீந்த உதவும் பாதையும் நல்ல மரக்கலம் அளிக்கும்.பெரியநாயகியே பொன்னுசல் ஆடி அருள்வாயாக. சிறப்புடைய பழமலையின் நிலையான அழகினுக்கு ஒத்தமயில் போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருளுக. (92)

3. கூறாடு வெண்பாற் குழைந்துஉதடின் மேற்செலக்
கொடுவிழி யனற்பொ றியெழுக்
குதைவரிச் சிலைநாண் எறிந்துகணை கோத்துவாள்
கொண்டமர் குறித்து வெஞ்சூர்
தாராடு புயவசுரர் கூட்டமொடு போந்தமரர்
தத்தளித்து ஓட வெம்போர்
தாக்கவுணரு டற்குடர் பிளந்துசிர கரமறத்
தடியவெழு சோரி யாழிக்
காரார் பிணத்தொடுஅறு சிரமிதப் பாய்க்கொண்டு
கரைசேர் கவந்த மாடக்
கட்டியழு மனைவியர்கள் திண்டாட வங்கைமலர்
கதிர்வேல் திரித்து வெய்ய
போராடு குழவியைத் தொட்டிலிட்டு ஆட்டுபவள்
பொன்னூசல் ஆடி அருளே
புகழ்பழ மலைப்பரமர் அழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

(பொ.ரை) கூறான வெண்பற்கள் குழைந்து உதட்டின் மேல் செல்ல அச்சம் தரக்கூடிய பார்வைகள் தீ போல் வீச, வில்லிலிருந்து அம்பு வெளியிப்பட்டு ஒழுங்காக குறித்தப்படி போர் அச்சம் ஏற்படும் படி குதிரை யானைகளோடு கூட்டங் கூட்டமாக தேவர்களும் தடுமாறி ஓடினர். அப்படிப்பட்ட போரில் இரத்தம் சிந்த, குடல்பிளந்து விழ, தலைகிழே விழ, குறைத்தலைகளும் ஆட, அங்கு அவர்கள் மனைவிமார்கள் கட்டி அழுதனர், இப்படி திண்டாடும்படி போர் செய்த கதிர்வேலன் எனும் திருமுருகன் குழந்தையாக இருந்த போது தொட்டிலிட்டு ஆட்டியவளே பொன்னூசல் ஆடி அருளுக. புகழும்படி அமைந்துள்ள பழமலை நாதரின் அழகினுக்கு ஒத்த மயில்போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருளக. (93)

4. தேங்கொளிய பொற்றே ரொடும்போர்க் கடுத்திடு
திருக்கோல முங்கண் டுவெஞ்
சினக்கோப அனலவியக் காமா னலஞ்சீறு

சிகையென எழுந்து படர்செய்
வாங்கொளிய குடிலகோ ஏரப் பிரான்மனதும்
வளைமேரு வில்லு முருக
வளரொளி யிளம்பிறை முடிந்துதுந் தலைமாலை
வரகுற்ற துந்தோன் றிடத்
தூங்கொளி கருங்களத் தொடுபோர்க் களத்தமர்
தொடங்கினவ ருளம லைரத்
துணைப்புருவ விற்கருங் கட்கணை தொடுத்தொருகை
தொடர்விற் குனித்து வெம்போர்ப்
பூங்கோல மேதிரு மணக்கோல மாயினவள்
பொன்னூசல் ஆடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

(பொ.ரை)

அச்சத்தோடு தேரோடு போர்க்குச் செல்லும் கோலத்தைக் கண்டு கோபங்கொண்டு, நெருப்பு போன்று சீறும்படி எழுந்து கடல்போன்று விரிந்த சடாமுடியை அணிந்துள்ள சிவபிரான், மனம் போல திரிசிரபுரம் அழிக்க மேருமை வில்லாகக் கொண்டு அழகுபோல வளம் ஒளிபொருந்திய இளம் சந்திரனை தலையில் சூட்டி மிகுந்த ஒளிவீசும் கறுத்த விடத்தோடும் போர்க்களத்தில் போர் தொடங்கிய போது தேவர்கள் உள்ளம் மகிழ்ச்சியுடையும்படி வில்போன்ற புருவமும் கரிய கண்ணாகிய அம்மைத் தொடுத்த கையை உடைய பூமாலை அணிந்து கடும்போரில் நின்ற அழகிய பொன்னூசல் ஆடி அருள்வாயாக. சிறப்புடைய பழமலை நாதர்க்கு ஒத்த அழகான மயில்போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக. (சிவபெருமான் பகாட்சரனை அடக்கப் புறப்படுகையில் பார்வதி சாரதியாக இருந்து பிரவணத்தைச் சவுக்காக் கொண்டு தொழிற் பட்டாள் என்பது புராணம்). (94)

5. திரையாடு பாற்கடற் றோன்றமுத முங்கைப்பச்
செங்கையமர் பைங்கி ளிசொலுஞ்
"சீ"யென வெறுப்புரை யாடிடும் பூங்கொம்பு
செம்மலரின் மாலை நாற்றி
விரையாட நடுவரவின் மணிகுயிற் றியபலகை
வீற்றிருந் தாடு தோற்றம்
விரிகுணக் குன்றில் இள வெயில்விரிக் கும்பருதி
வியன்மண் டலத்தை யேய்ப்பக்
கரையாடு மலைமுத்த நதிநீந்தி குமரன்வாய்க்
கையாடு பாலூட்டிமேற்
கதிகாட்டி முடியின்மல ரடிசூட்டி மதியூட்டு
கருணா கரிக்க டையனேன்
புரையாடு மிதையமல ரிடையாடு மெழின்மயிற்
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூச லாடி அருளே.

**(பொ.ரை)** திரைவீசும் பாற்கடலில் தோன்றிய அமுதமும் சிவந்த கையை உடைய அம்பிகை 'சீ' என வெறுப்பாக உரையாடும் பூங்கொடி எப்பொருளுக்கும் இறைவனின் மாலையிலிருந்து வாசனை வீச, ஆதிசேடனின் பொருந்திய பலகையில் வீற்றிருந்து ஆடும் காட்சி, வீரமுடைய வளான காளி, கிழக்கு மலையின் காலைப் பொழுதில் சூரியன் தன்கதிரை விரிக்கும் வித்துமண்டலத்தை வஞ்சிக்க, கரையுடைய மலையில் மணிமுத்தாநதியில் நீந்தி குமாரதேவர்க்கு உன் கையால் பாலூட்டி வீடுபேறு நிலை காட்டி, தலையின் உன் மலரடியை சூட்டி (தீட்சை செய்வித்து), அறிவு ஊட்டிய கருணைக்கு இருப்பிடமானவளே, கடையவனானேன், விளக்கு மாடம் என்னும் இதயமலர் போன்ற இரகசியமான இதயக்கமலத்தில் இடையாடும் அழகுமயில் போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக. சிறப்பு மிக்க பழமலையின் பழமலைநாதர் அழகினுக்கு ஒத்த மயில்போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக. ⑮

6. பகர்மகர யாழினே ழிசைநா மகள்பாடப்
பாயொளிபொன் னூச லாடப்
பையரவ மாலைபுயம் நெக்கிக் குலுங்கவெழில்
பார்த்துள மகிழ்ந்து நசையா
வகிர்சடைச் சிரமசைத் திடநடுப் பொதிகங்கை
மங்கைதுள் ளிக்கீழ் விழ
வாவென்று அழைத்துபகை மாறிக்கட் டித்தழுவி
வாய்முத்தம் இட்ட ளவளாய்த்
துகிர்சடைப் பரன்முடியில் வைத்தாசி சொல்லியவர்
துன்றுசந்தேக மொருவுந்
தோகைகரு ணாகரிகல் யாணசுந் தரியெத்
தொழிற்குமுன் னின்று உதவிசெய்
புகர்முகக் கயமுனியைத் தொட்டிலிட் டாட்டுபவள்
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

**(பொ.ரை)** பதினேழு நரம்புகளையுடையதாகச் சொல்லப்படும் மகரயாழின் ஏழு இசைகளைச் சரசுவதி பாட, பெரியநாயகி பொன்னூசல் ஆட, பாம்பு மலையை தோளில் அணிந்து இருக்கும் அழகைப் பார்த்து மகிழ்ந்து குற்றமற்ற வார்சடை உள்ளதலை அசைந்து ஆட, நடுப்பகுதியில் கங்கையாகிய மங்கை துள்ளிக்கீழே விழ, வாவென்று அழைத்து கங்காதேவியிடத்துள்ள பகையை மாற்றிக் கட்டித்தழுவி, முத்தம் கொடுத்த வாயால் பவளநிற சிவன் சடை முடியில் வைத்து ஆசி சொல்லிய அவர்க்கு சந்தேகம் வரும் கருணைப் பெண் என்னும் கல்யாண சுந்தரியே எங்கள் தொழிலுக்கு முன் நின்று உதவிசெய். கபிலநிறம் கொண்ட கயமுனி என்னும் விநாயகரை தொட்டில் இட்டு ஆட்டுபவளாகிய, பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக. சிறப்பு மிக்க பழமலையில் எழுந்தருளி அருள்பாலிக்கும் பெரியநாயகரின் அழகுக்கு ஒத்த மயில் போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருளுக. ௬

7. தெண்ணிலவு விரிரத்ந பலகைமீ துற்றம்மை
திருவூச லாட்ட வாடுஞ்
செவ்வியையு மதியமுத கிரணமுண் டுலவுவிண்
செறிசகோ ரப்பு ளாயும்
பண்ணிலவு மறுகாற் சுரும்பாயும் அங்கைவளர்
பைஞ்சிறைக் கிள்ளை யாயும்
பரசிவன் திருவுருப் பலவெடுத் துன்மகிமை
பார்த்துளங் களி தூங்கிட
விண்ணுலாம் மேற்றலத் தந்நலார் குடைபுனலின்
விரைகுங் குமச்சே றுதோய்
வீறுவெள் ளானைசெவ் வானையா முருநோக்கி
வெண்பிடி வெருண் டோடுமாற்
புண்ணியம் பொலிமாடம் மலியுமுது கிரியரசி
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூச லாடி அருளே.

**(பொ.ரை)**

குளிர்ச்சி பொருந்திய சந்திரனின் விரிந்த இரத்தின ஒளியைப் பெற்ற உமையே பொன்னூசல் ஆட்ட ஆடும் அழகையையும் மதிபோன்ற கதிர்சேர்ந்து உலாவும் நிலா முகிப் புள்ளாயும், பண் பொருக்கும் நிலாவும், ஆறுகால்களைக் கொண்ட வண்டினமாகவும் கைகளிலே தவளும் கிளியாகவும் சிவபெருமான் பல உருவங்களை எடுத்து உன் சிறப்புகளைப் பார்த்து உள்ளம் மகிழ்ந்து உறங்கிட, தேவலோகம் எல்லாம் போற்றும் அழகிய தேவப்பெண்கள் தண்ணீரில் குங்குமம் தோய்த்து நிற்கும் போது வெள்ளை யானை, சிவப்பு யானையாகக் காண்பதைக் கண்டு அஞ்சியோடுதல் போல் அறம் விளங்கும் மாடங்கள் நிறைந்துள்ள பழமலைக்கு அரசியாகிய பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருளுக. சிறப்புடை பழமலையின் பெரியநாயகரின் அழகுக்கு ஒத்த மயில்போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக.

(97)

8. செழுமுலைச் சுமைபொறாது இறும்இடை எனக்குழற்
செறியும்வண்டு ஆர்த்து எழுப்பொற்
செவ்வூசல் காலுதைந் தாடும்அம யத்து நாச்
செல்விதன் செங்கை மலரால்
விழுமலர்ப் பதத்துனடி பற்றியிது வெண்பிறை
வியன்சுவட தாமி துவுமோர்
வெண்வலம் புரிகீற்ற தாமெனக் கண்டம்மை
விதிவலிய தென்று மகிழா
வழுவில்வலி யோர்செல்வர் யார்க்குமொரு நாளினும்
வணங்கா முடித்த லைவியோர்
வண்கயிலை வரையுற்றுச் செங்கைவிற் குனிஞான்று
வளமுடி வணங்க லென்னோ?
புழுகணித் திருவழகி முதுகிரிப் பெண்ணரசி
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

(பொ.ரை) பருத்த மார்பகம் சுமை தாங்காது இற்று விடும் படியான இடைய உடைய கூந்தலில் பூக்களில் சூடியிருப்பதால் வண்டுகள் ஆராவாரம் செய்வது போல அழகிய ஊஞ்சலில் கால் உதைத்தாடும் சமயத்து நாமகள் தன் செம்மையான கைமலரால் விழுகின்ற மலர்களைப் பற்றி இது வெண்மையான சந்திரன் என அதன் பாதை இது தாம் என்று வெண்மையான வலம்புரிச் சங்கின் சுற்றுகள் தாம் எனக் கண்டு அம்மை, விதியானது வலியது என்று மகிழ்ந்து குற்றமில்லாத வலிமையுடைய செல்வந்தர்கள் எவர்க்கும் எந்த நாளிலும் வணங்கமாட்டார். தலைவி வெண்மையான கயிலைமலை சென்று தன் கையில் உள்ள வில்லின் இசைக்காக தலை வணங்கியது என்னே. வாசனை மிகுந்த செல்வ அழகியான பழமலையின் பெண்ணரசியே பழமலையின் அழகரான பெரியநாயகருக்கு ஒத்த மயில்போன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருளுக. (98)

9. நீதிவழு வாதுநற் சிவராச தானியாய்
நிகிலவகி லண்ட மெல்லாம்
நெஞ்சுபறை கொட்டிடச் செங்கோல் செலுத்திக்கொடி
நிறுவியா ருயிர்செய் கன்மம்
பேதியா வகைபடைத் திடலளித் தல்போக்கல்
பின்மறைத் தடல்வி ளக்கல்
பிரமன்முத லைவர்க்கு மைந்தொழி னடத்திவரப்
பேரருட் கட்க டையினால்
ஈதிவற் கீதென எடுத்தலுவ லிட்டுப்பின்
பிவர்கட்கு மைந்தொ ழில்செயும்
ஏகநா யகிநித்ய கல்யாண சுந்தரியிவ்
வேழைசொல் தமிழ்க்கி ரங்கிப்
பூதியனு பவஅடி நிழற்குடி யிருத்துபவள்
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தக்கொடி
பொன்னூச லாடி அருளே.

(பொ.ரை) நீதிகுறையாது நல்ல சிவ அரசனாய் எல்லா உலங்களுக்கெல்லாம் மனம் மேளம் கொட்டிடச் செங்கோல் ஆட்சி நடத்தி கொடி நாட்டி, எல்லா உயிர்களுக்கும் கன்மாவின் (வினை) பலன் நியமம் தவறாது ஐந்து தொழிலான படைத்தல், காத்தல், அழித்தல் (ஒடுக்குதல்), மறைத்தல், அருளல் செய்தும் இதனைப் பிரம்மன் முதலான ஐவர்க்கும் ஐந்துதொழில் நடத்திவர பேரருளைக் கடைக்கண்ணால் கொடுத்து, அதற்கு இது என எடுத்து பணித்தலும் செய்தும் அவர்களுக்குரிய ஆற்றலையும் தருபவள் ஏக நாயகியான பராசக்தி. நித்திய கல்யாண சுந்தரியான சுமங்கலியே இந்த ஏழையின் சொல் தமிழுக்கு இரங்கி அனுபூதியான (மெய்யுணர்வு) அனுபவ நின் திருவடி நிழல் குடியுள் இருத்துபவளே, பொன்னூசல் ஆடி அருளுக. சிறப்புடைய முதுகுன்ற பழமலை பெரியநாயகர் ஆழகினுக்கு ஒத்த கொடிபோன்ற பெரியநாயகியே பொன்னூசல் ஆடி அருள்வாயாக. (99)

10. பண்ணிசைக் கும்பிழை யளிக்குமணி வண்டுமுரல்
பன்மலர் முடித்த குழலும்
பனிமதித் திருமுகமும் அருள்விழியு மிருசெவிப்
பதிமணித் தோடு குழையுந்
தெண்ணிலவு முத்தமூக் குத்தியுந் திருநுதற்
செறிபட்ட முந்தி தைமுஞ்
செய்யநாற் புயமுமலர் அபயவர தமும்அக்கை
திகழ்பைஞ் சிறைக் கிள்ளையும்
வண்ணமலர் மாலைபுனை மார்புந் திருத்தனமும்
வஞ்சியிடை யொட்டி யாணமும்
வனைமே கலைப்பட்டு வீக்குடையும் நூபுரம்
வனைந்திடு மலர்ப் பாதமும்
புண்ணியத் திருவழகி புனைதமிழ்க் கருளரசி
பொன்னூச லாடி அருளே
புகழ்பழ மலைப்பரம ரழகினுக் கொத்தமயில்
பொன்னூசல் ஆடி அருளே.

(பொ.ரை)

பண் இசைக்கும் பிழை பொறுக்கும் மணிவண்டுகள் ஓசை விடும்படி அணிந்துள்ள கூந்தலும் (வேதசாகை என்பர்). குளிர்ச்சி பொருந்திய திருமுகமும் அருள்பார்வையும் (திரியம்பகம்). இருசெவிகளிலும் உள்ள மணியாலான தோடும் குழையும் (பரநானம், அபரநானம்). குளிர்ச்சி உடைய நிலவு போன்ற மூக்கில் முத்தாலான மூக்குத்தியும் (சுழுமுனை). உன்திருநெற்றி நெருங்கிய பொட்டும் (முப்பாழுக்கு அறிகுறி). பாசம் அங்குசம். கரும்பு. அதிக மாலை கொண்டநாலு கரங்களும் (பிந்துஸ்தானம்). மலர்போன்ற கைகள் இரண்டும் அஞ்சல் வேண்டாம் என்றும் அருளுண்டு என்றும் குறிப்பிடுகின்றன. கையிலிருக்கும் கிளி ஆன்மாவைக் குறிக்கும்.பலநிறமுடைய மலர்மாலை அணிந்திருக்கும் மார்பும். சிறப்புடைய கொங்கையும் கொடியிடை ஒட்டியானமும் அழகே. கலைவேலைப் பாடுடைய குமிழ் உள்ள காற்சிலம்பும் அலங்கரித்திருக்கும் கால்களும் அருளே வடிவெடுத்த அழகினால் அழகுதமிழ்

இலங்குதமிழ் போன்ற தமிழிலுள்ள எல்லாவற்றையும் அருளும் தமிழுக்கு அரசியானவளே பொன்னூசல் ஆடி அருளுக. சிறப்புடைய முதுகுன்றத்தின் பழமலை நாதர்க்கு ஒத்த பயில் போன்ற பெரியநாயகி அம்மையே பொன்னூசல் ஆடி அருளுக. (100)

**பொன்னூசல் பருவம் நிறைவுற்றது.**

திருச்சிற்றம்பலம்.

**அருள்மிகு பெரியநாயகி அம்மன் பிள்ளைத்தமிழ் நிறைவுற்றது.**



## பாடல் முதல் குறிப்பகராதி

உ

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு குமாரதேவர் அருளிய
# பெரியநாயகியம்மைப் பதிகம்

## கிரியை அறுதல்

1. விரிவுறும் உருவம் நாமம் அதகற்றின்
விடயங்கள் விளங்குறா இதனால்
மருவுறு பொறிபோம் பொறியறக் கரணம்
மாய்ந்துறும் கரணமாய் அதலினால்
புருடன்முன் ஏழும் சுத்தம் ஓர் ஐந்தும்
போமதால் சச்சிதா னந்தம்
கிரியைஅற் றிலங்கும் என்றனள் விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** விரிவாகக் கூறப்படும் ஆன்மாக்களின் வடிவம், பெயர்களை நீக்கினால் மட்டும் விடயங்கள் விளங்காது (விடயவாரகம்). இறைவனை அடைய விரும்பும் ஆன்மாக்கள் ஞானம் பெறுதல் வேண்டும். ஆன்ம தத்துவங்கள் 24, வித்தியா தத்துவங்கள் 7, சிவ தத்துவங்கள் 5, ஆக 36 தத்துவங்களும் இறையருளால் நீங்கினால் உண்மை, அறிவு, ஆனந்தமயமாய் (சச்சிதானந்த) சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கனுள் கிரியை அற்று கிரியா ஞானம் பெறலாம் என்று விருத்தகிரியில் அமர்ந்து அருள்பாலிக்கும் பெரியநாயகி மொழிந்தாள்.

(1) விடயவாரகம் - விடயம் - காரியம். ஆவாரகம்-- மறைப்பு. ஆணவஆற்றல் உயிர்களை மறைக்கும். உயிர்களை மறைப்பது (ஆணவ) முழு இருள். **இருள்நிலை** என்பர். குணம் குறிகளோடு கூடிய நிலை. (2) சொரூப வாரகம் -- சொரூபம் உண்மை இயல்பு. ஆவாரகம் - மறைப்பு. கன்மங்களோடு மாயை கூடும்பொழுது ஆன்மாக்களின் அறிவை ஆணவம்

முழுமையாக மறைத்து அறியாமையில் மூழ்கச் செய்யும். அதுவே அதன் உண்மை இயல்பு. **மருள் நிலை** என்பர். குணம் குறிகளைக் கடந்த நிலை. தத்துவக்களைவு என்பர். இக்கருத்தை சிதம்பர சுவாமிகள் பஞ்சதிகார விளக்கம் 9ஆம் பாடலிலும், வேதகிரீசுவரர்பதிகம் 5ஆம் பாடலிலும் காண்க. மேலும் ஆதிசிவப்பிரகாசர் "அத்துவித வெண்பா" எனும் நூலில்.

கல்நாய் அதனைக் கனக மயம் ஆக்கியக்கால்
பின் நாய்எனும் பேர் பிழைபடா - அன்னதனால்
தீய பொருள்கள் தினம் சுசி செய்யும் தீக்கை
ஆயவும் பேத தீக்கை. (பாடல் எண் 101 ) என்று

கூறியுள்ளார்

இப்பாடலில் நாய் என்னும் உருவமும், பெயரும் மாறினால்தான் அதன் இழிவு நீங்கும். சிவ தீக்கையினால் உடம்பைச் சுத்தமாக்கிச் சிவஉடம்பாக மாற்றிச் சிவலிங்கம் அணிந்து பிரியாதிருப்பதனால் மட்டுமே இழிவு நீங்கும் எனப் பொருள் காண்க. ①

## பேரின்பப்பேறு

2. உளப்படும் உருவ நாமம் அதகற்றின்
உள்ளசற் சிற்சுகம் தோன்றும்
வளப்படும் இதனால் உலகு கண்ணாடி
வருநிழலா நிழல் மறிந்தால்
விளக்குறும் ஞான வெளியதாம் இதனின்
விளையும்இன் பெனக் கிசைத்தாள்
கிளக்குறு தவத்தோர் தரித்துரை விருத்தக்
கிரியமர் பெரியநா யகியே.

**கருத்துரை:** உள்ளத்தில் தோன்றும் உருவமும் (வடிவமும்) நாமமும் (பெயரும்) முன்னர் கூறியவாறு தத்துவம் நீங்கிடில் மனதில் ஞானமாகிய சிற்சுகம் தோன்றும். அதனால் இவ்வுலகில் சிவமே மெய் எனவும் மற்றவையாவும் பொய்யாகித் தோன்றும். இவ்வுலகையே கண்ணாகக்கொண்டு காணில்

இவ்வுலகம் கானல் நீர், நிழல் எனத் தெரியும். அவ்வான்மா மனதில் சிவமயமாகி ஞானவெளியாய் விளைந்து பேரின்பமாய்த் திகழும் என உரைத்தாள். சிறந்த மொழியினைக் கூறும் தவத்தினர் வாழும் விருத்தக்குன்றினில் விளங்கும் பெரியநாயகிம்மை உரைத்தனள்.

உருவம், நாமம் என்பவற்றை சிதம்பர சுவாமிகள் நினைவு, அறிவு என்று சந்நிதி முறையில் கூறியுள்ளார்.

" பரனது முகத்திற் குலகுபொய் சீவன்
படிற்றுளத் தினுக்கது மெய்ம்மை
திரமுறு சாட்சி தானெனச் சீவன்
தெரிந்திடிற் பரன்மனம் இவற்காம்
விரவிய சகமப் போது பொய்யாகி
விளங்குறு மென்றெனக் கிசைத்தான்"

-சிற்சுகம் 12(4) ②

## ஞான தரிசனம்

3. பழுதைஎன்றுஉணரின் தன்முனர்த் தோன்றும்
பாம்பும் அப்பழுதையாம் அதுபோல
முழுதுணர் அறிவாம் தன்னையே காணின்
முரணுறு சராசரம் எவையும்
எழுதரும் அறிவாய் விளங்குமென் றிசைத்தான்
எழுபவம் துடைத்தெனை அளித்த
கெழுமணி முத்த நதிசெறி விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** திரிபுக்காட்சி, பாம்பு (அரவு) / பழுதை (கயிறு). இரவில் நடந்து செல்பவன் கயிற்றை பாம்பெனவே மயங்குதல் போல அறிவு மயங்காமல் முழுமுதற் பொருளை, ஞான சொரூபமாய்த் திகழும் கடவுளைத் தனது உளத்தில் அறிவால் காண்பானாகில் மாறுபட்ட இவ்வுலகில் அன்பே வடிவாய் அமர்ந்துறையும் காட்சியைக் காணலாம். பிறவிப்பிணியை நீக்கி

எமக்கு மணிமுத்தாநதி சூழ்ந்த விருத்தக் குன்றினில் ஞானப்பால் அளித்த பெரியநாயகி இவ்வாறு உரைத்தனள்.

இதனையே திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் பின்வருமாறு கூறியுள்ளார்.

பாம்பாகித் தோன்றிற் பழுதை சற்றுந் தோன்றாதாம்
பாம்பின்றித் தோன்றில் பழுதையே-மேம்பாடாய்
பொய் தோன்றின் மெய் தோன்றா போரூரா நின்னருளல்
மெய் தோன்றில் பொய் தோன்றா வீடு. (சந்நிதிமுறை.மாலை.62)

③

## பந்தம் அறுதல்

4. சொரூபமே தான்என் றுணர்தரின் பரனும்
துகளுறு சீவனும் சகமும்
மருவுதன் நினைவில் எழுந்தமித் தைகளாம்
வந்திடு பந்தம் விடிலைவாம்
ஒருவுயிர் தானென் றுணரில்அம் மூன்றும்
உள, பந்தம் வீடும்உண் டென்றாள்
கிரிதவப் பயனாய் வருமொரு விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** ஆன்மாவே (நானே பிரமம்) இறைசொரூபம் என்றுணரின் சிவனும் குற்றமுடைய உயிர்களும் உலகமும் நினைவு வயமானால் அவை (அவித்தை) அஞ்ஞானம் ஆகும். இவற்றில் பிறப்பு, இறப்பு என்பதில்லை. வீடு பேறு என்பதும் இல்லை.

ஆன்மாவே (உயிர்) இறையை அடைய தளை (பாசம்) உண்டு என்று அறிவால் அறிந்து உணர்ந்தால் பந்தம் (பிறப்பு, இறப்பு / வீடுபேறு) உளஎன்பதை தவத்தின் பயனாய் விருத்தக் குன்றினில் வாழும் பெரியநாயகி எமக்கு உரைத்தனள் என்க.

## அத்வைதம் (சுருதி) வேதாந்தம் / அத்துவிதம் - சித்தாந்தம்

வேதம் மறை என்பர். அறிவுக்கு எட்டாதது. மறைந்திருப்பது மறை என்பர். ஒருவரால் செய்யப்பட்டதன்று.

தானே உண்டானது. எழுதாக்கிளவி, குருவின் மூலமாகக்கேட்டு உரை வேண்டுவது சுருதி என்பர். வேதத்தை பிரமாணம் என்பர். ஆறு அங்கங்களையும் மூன்று உபவேதங்களையும் கொண்டது. இருக்கு, யஜுர், சாம, அதர்வணம் என நான்கு வகைப்படும்.

நானே பிரமம் (அஹம் பிரம்மாஸ்மி) எனக்கூறுகிறது. யஜுர் வேதம்.

"வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்துகின்ற நுண்ணியனே" - திருவாசகம்

"சகல வேதமுமே தொழும் சமராபுரி" எனவும் வேதங்களை மொழிந்தவன், வேதப்பொருள் ஆனவன் சிவபெருமான். எனவே திருக்கழுக்குன்றில் வேதகிரியில் "பவரோக வைத்தியப் பெருமானாக" விளங்குகின்றான் என்ற சிதம்பர சுவாமிகள் வாக்கால் அறிக.

அத்துவிதம் - சைவ சித்தாந்தம் - இருமையில் ஒருமை எனும் கொள்கை ஒன்றாய், வேறாய், உடனாய் இருப்பவன் சிவபெருமான். இதனை திருஞான சம்பந்தப்பெருமான் திருப்பதிகத்தினுள்,

ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண்குணமூன்றாய்
மாறாமறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்
ஆறார் சுவை ஏழோசையொடு எட்டுத்திசை தானாய்
வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம் மிழலையே.--

எனும்பாட்டால் உணர்க.

④

**ஞாதுரு முதலிய பாவனை நீங்கல்**

5. அறிபொருள் அறிவோன் அறிவினைக் கொடுப்போன்
ஆன முப்பொருளும் ஓர் விடயம்
பொறியுறப் பிடித்தால்உள:இதை விடுத்தோர்
பொருளைநா டுதன் முனர் இடையே
பிறிவறத் தோன்றும் சொரூபமிந் நிலையில்

பேசுமுப் பொருளுமிலவாம்
கிறியற அறித என்றனள் விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே

**கருத்துரை:** ஞாதுரு, ஞானம், ஞேயம் எனும் முப்பொருளையும் வடமொழி நூலார் "திரிபுடிஞானம்" என்பர். முத்தி நிலையில் அறிபவன், அறிவு, அறியப்படும். பொருள் இம்மூன்றும் ஒன்றே என்பர். சிவத்தோடு இரண்டறக்கலத்தல் எனினும் ஆம். திரிபுடி ஞானம் உள்ளவரையில் இறைவனோடு ஒன்றுபட முடியாது. ஒன்றுபட முடியாத நிலையில் சிவானந்தத்தை எய்துதலும் இயலாது. யான், எனது என்னும் செருக்கு அகன்ற நிலையிலும் ஆணவ மல வாசனையினால் மயக்கவுணர்வு மிகும். தனது அறிவு சிறிதும் தோன்றாமல் சிவமே எனும்படி அதனோடு ஒன்றுபட்டு அதுவேயாகி திருவருளில் அழுந்தி நின்று ஏகனாகி ஐக்கியப்பட்டு நிற்கும் நிலை என விருத்தக் குன்றினில் விளங்கும் பெரியநாயகி உரைத்தனள்.

சிவஞான போதம் நூற்பா.10இல்

"அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி இறைபணி நிற்க: மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே", என்னும் நூற்பாவினால் ஏகனாகி நிற்றலும், அருள்விழி நிற்றலும் உணர்க. ஏகன் அநேகன் எனவும் 'வேண்டத்தக்கது அறிவோய்' எனும் திருவாசகத்தாலும் உணர்க. (5)

**கனவு நிலை**

6. அரவிலை பழுதை உணர்ந்தவர்க் கதுபோல்
அகில மெய்ப்பொருளினை உணர்ந்தோர்
கொருவுறாதிருத்தல் எனையெனிற் கானல்
உறுசல மிலையென உணர்ந்தும்
மருவலின் நானா விகாரமேதென்னின்
மலிகன வினிலுறும் என்றாள்
கிருதுசெய் மறையோர் பரவிய விருத்தக்
கிரியமர் பெரியநாயகியே.

**கருத்துரை:** காண்பது பாம்பு அன்று கயிறே என உலக உண்மைப் பொருளை உணர்ந்தவர் ஏகாக்கிரசித்தமாய் (உறுதிப்பாடுடையவராய்) இருப்பதுயென்னையெனின்கானலில் நீர் இல்லை என்பதையறிந்தும் நிட்டை/ தியானத்திலிருப்பதால் மாறுபாடு கொள்ளார். ஐந்தவத்தையில் கனவுநிலையில் இருப்பர் என்க. காரியம் (கருமம்) செய்யும் அறவோர் போற்றும் விருத்தகிரியில் (பழமலையில்) அமர்ந்துறையும் பெரியநாயகியே.

ஆன்மாவின் செய்தொழில் ஆறனுள் ஐந்தவத்தைக்கும் உட்படுவதும், பேரின்பத்தை வேண்டுவதும் தலையாயது. அறிவு, விருப்பம், செயல் எனும் மூவகையாற்றலும் கொண்டு செயல்படுவது. ஐந்தவத்தையாவன எவையெனின் அவை 1.சாக்கிரம் (நனவுநிலை) 2 சொப்பனம் (கனவு நிலை) 3. சுழுத்தி, 4.துரியம், 5.துரியாதீதம் என்பனவாகும். இவற்றுள் சாக்கிரத்தில் சாக்கிரம் முதல் நிலை சாக்கிரத்தில் சுழுத்தி இரண்டாம்நிலை. சாக்கிரத்தில் சொப்பனம் மூன்றாம் நிலை. சாக்கிரத்தில் துரியம் (பேருறக்கம்) நான்காம் நிலை. சாக்கிரத்தில் துரியாதீதம் (உயிர்ப்படங்கல்) ஐந்தாம் நிலை எனப்படும். ⑥

## சிவ சீவ ஒருமை

7. தடத்தின்மற் றதனில் தங்குபல் கடத்தில்
சாயையும் சாயையில் லதுமாய்த்
திடத்தொடும் விளங்கும் விசும்பு போல் ஈசன்
சீவன்நீங் கிருவர் சாட்சிகளாம்
இடத்துறும் பிணையிற் தோன்றுறும் சிவம்இங்
கிருவர் சாட் சிகளுமொன் றென்றாள்
கிடைத்தநல் நிதியாய் எனக்குறும் விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** அண்டப் பரவெளியிலும் மற்றும் இவ்வுலகெங்கும் அத்துவாக்களின் வடிவமான கலசத்தின் கண்ணேயும் எங்கும் நீக்குமற நிறைந்திலங்கும். பஞ்சபூதங்களுள் ஒன்றான விசும்பு

(ஆகாயம்) போன்று முத்திநிலையில் சிவனும், சீவனும் (ஆன்மா) ஆகிய இருவருமே சாட்சிகளாம். இடப்பாகம் அமர்ந்துறையும் சக்தியும் சிவமும் ஒன்றே, எமக்குக் கிடைத்த நன்மை தரும் செல்வமாக விளங்குகின்ற விருத்தக்குன்றினில் வாழும் பெரியநாயகியே,

சிவம் என்றும் சக்தி என்றும் இருபொருள் போல வழங்கப்பட்டாலும் இருபொருளாகா. குணம்-சத்தி, குணி-சிவம் என்க. அபின்னாசத்தியும் பின்னாசத்தியும் ஒன்றே. இதனைத் தாதான்மியம் என்பர். ஒருமையில் இருமை என்பது இதன் பொருள். தற்கிழமை என்பர் இலக்கண நூலார். சிவஞான போதம் இரண்டாம் நூற்பாவின் விளக்கவுரையில் காண்க. ⑦

### பின்னமயக்கம்.

8. ஆருயிர் தானாம் அவன் மனதைச
தகங்காரத் துதித்தது வாகும்
பேருயிர் சாட்சி யானவன் மனமோ
பின்னையா மாதலால் அவற்குக்
கூருறும் உலக மயக்கமாம் இவற்குக்
குறித்த தன்லீலையாம் என்றாள்
கீரனை அளித்தோற் குவந்ததாய் விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** ஆன்மா-முத்தி நிலையில் சிவனும் சீவனும் ஒன்றே ஆயிடினும் சீவனது அகங்காரம் தைசதம் என்னும் நிலையினை உடையது (உயிர்). ஆதலால் அச்சீவன் உலகமயக்கத்தின் பாற்படும். சிவமோ அத்தகைய நிலையேதுமின்றி (பேருயிர்) தனது திருவருள் விளையாட்டால் அச்சீவனை அருள் நோக்கால் கண்ணுறும். திருவருளால் அழுந்தி நிற்கும் நிலை. குற்றம் குற்றமே என மொழிந்த நக்கீரனை மகிழ்ந்து பெற்றதாய் போன்று எமக்குக் கூறினள் விருத்தக்குன்றினில் அமர்ந்து உறையும் பெரிய நாயகியே.

அகங்காரத்தின் கூறுகளாவன 1.தைசதம் 2.வைகாரிகம் 3.பூதாதி.
தைசதம்-பதின்மருள் தன்னை விடுத்து பிறரை மட்டும் எண்ணுவது.
வைகாரிகம்-சத்துவகுண இராசத குணமும் மேலிட்டது.
பூதாதி-ஐம்பூதத்தை முதற்காரணமாகக் கொண்ட உலகு. (8)

## பிரம(இறை) நிலை

9. ஓதுரு நாம ம்அகற்றிடின் தோன்றும்
உள்ளசத் சிற்சுகம் இதுவே
தீதுறு சீவ சாட்சியிங் கிதனைத்
தெரிந்திடும்சீவனும் இதுவாய்
ஏதமொன்றில்லாப் பிரமமாம் என்றேன்
இருளற அருள்புரிந் தளித்தாள்
கேதமில் தவத்தோர் சூழ்தரும் விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

கருத்துரை: இதுவரையில் கூறியவண்ணம் ஆன்மா ஆவணம் ஒடுங்கி திருவருளால் அவனது திருவடிநிழற்கீழ் அழுந்தி நிற்கும். பேரின்பம்/சிற்சுகம் என்பதுவும் இதுவே. சீவனும் குற்றமற்ற நிலையில் சாட்சியாய் நின்று அவனருளே அதுவாகக் காட்டும். துன்பம் இல்லாத இன்ப அளவு வடிவாகி பிரமமாய் (இறை) பிறவி இருள்நீங்குமாறு, திருவடி நிழலில் இளைப்பாற அருள்பாலித்தாள் விருத்தக்குன்றினில் அமர்ந்துறையும் பெரியநாயகி.

சத்திநிபாதம் - அருள் வீழ்ச்சி (அருள்நிலை). ஆன்மா ஐக்கியமாகும் அருள்நிலை கூறப்பட்டது. அப்பொடு பெய்த உப்பே போல சிவமாம் தன்மை அடைதலை வீடுபேறு என்பர். சைவ சித்தாந்த நிலையில் ஆன்மா சிவமாதலை சின்முத்திரை காட்டி நிற்கும். இந்நெறியில் நின்றோர் நால்வர் பெருமக்களுள் முதல் மூவர். சித்தமலம் அறுவித்து சிவமாக்கி எனையாண்ட அத்தன். திருவாசகம் 51 அச்சோப்பதிகம். மணிவாசகர் நெறி. ஞானத்தில் ஞானமென்பர். வீர சைவ நெறி யெனலாம். சிவமே ஆட்கொண்ட திறம் வியப்பிற்குரியது. கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம்

சிவப்பிரகாசர் அருளிய 32 நூல்கள் உள. அவற்றுள் நால்வர் நான்மணி மாலை எனும் நூலினுள் இதன் விளக்கம் காண்க. பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகி அருள் புரிந்தாள் என்க (அருள் நிலை). ⑨

**அம்மை அருளை வியத்தல்**

10. எஞ்சுறும் உளத்தோ டென்னையார் என்றே
இரங்கியே திரிந்துழல்வேனை
மஞ்சுறழ் காத்துக் கன்னை குந்தி
மகனென உணர்த்துதல் கடுப்ப
அஞ்சலென் றழைத்து நீ அது ஆகும்
ஐயமின் றென்னவே அளித்தாள்
கிஞ்சுக வாயால் உய்ஞ்சிட விருத்தக்
கிரியமர் பெரிய நாயகியே.

**கருத்துரை:** ஏக்கப்பெருமூச்சு விடும் உளத்தினராய் எம்மீது இரக்கப்பட்டு திரிந்துழலும் எம்மை யார்? என்று கேட்க மாட்டார்களா? என ஏங்கும் தன்மை கொண்ட, கார்மேகம் கைம்மாறு கருதாது கொடுக்கும் (கன்னனை) கர்ணனை, குந்தியானவள் தன் மகன் எனக் கூறிய பொழுது தோன்றிய அச்சத்தைப் போக்கி அஞ்சாதே என்று எம்மை அழைத்து "நீ அது ஆகும்" என ஐயம் அகலுமாறு உரைத்தனள். கிளிகள் கொஞ்சும்வாயால் யான் உய்யுமாறு விருத்தக்குன்றினில் வாழும் பெரியநாயகி இவ்வாறு உரைத்தனள்.

"தோன்றாமல் அத்தவிதம் தோன்றியிட லிங்கம் அது
ஊன்றும் அங்கம்நீ என்று உணர்த்தியே-ஏன்ற அதுநீ
ஆனாய் எனவே அருளால் சிவன் உரைத்த
ஞான ஆகமம் உரைக்கும் நன்று"

(அத்து வித வெண்பா. 134)

குந்திக்கு உவமை பெரியநாயகி. கர்ணனுக்கு உவமை குமாரதேவர்.

"தத்துவமசி" எனும் வாக்கியத்தின் (சாம வேதம்) பொருளை உணர்த்துகிறார், ஞானப்பால் உண்ட ஞானாசிரியர் வேதாந்தத்தின் பொருளை ஈண்டு எடுத்துரைக்கிறார். இதனால் இவர் வேதநெறி அகவல், ஆகம நெறியகவல், பிரம சித்தியகவல், பிரமனுபவ அகவல், சிவதரிசன அகவல் மற்றும் சிவ சமரச வாத அகவலால் வேதாந்தத்திற்கும் சித்தாந்தந்தத்திற்கும் பாலமாய் இருந்தனர் எனலாம்.

தற்தமே லிங்கம் தகும் அங்கம் தொம்பதமா
நிற்கும் அசிபதமே நேர் அயிக்கப் -- பொறபதுஎன
அங்கலிங்க சங்கம் என அன்றே கருதி சொன்னேன்
தாங்கிய சற்காரியத்தாற் தான்.
--- ஆதிசிவப்பிரகாசர் அருளிய அத்துவித வெண்பா
(பாடல் எண்.77) ⑩

**பெரியநாயகி அம்மைப் பதிகமும் உரையும் நிறைவு பெற்றது.**

திருச்சிற்றம்பலம்

உரையாசிரியர்
திருத்தொண்டர் மாமணி, சந்நிதிச்செல்வர்
புலவர் **பா.மாசிலாமணி**, எம்.ஏ.எம்.எட்.,
செம்பாக்கம்.



உ

சிவமயம்

## ஆதீன வெளியீடுகள்

1. விருத்தாசல புராணம்
2. அருள்மிகு பெரியநாயகி பிள்ளைத்தமிழ்
3. சகச நிட்டை
4. மாணிக்கவாசகர் யார்?
5. சுத்த சாதகம்
6. மகாராஜா துறவு
7. சின்மய தீபிகை
8. சிவ தரிசன அகவல்
9. திரு ஊசல்
10. அத்துவித வெண்பா
11. அருள்திரு ஆதிசிவப்பிரகாசர் வரலாறு
12. அருள்திரு உமாபதி சிவாச்சாரியார் வரலாறு
13. அருள்திரு குமாரதேவர் வரலாறு
14. சாத்திரக் கோவை
15. அத்துவித வெண்பா (மூலம் உரையும்)
16. திருச்செங்காட்டங்குடி தலபுராணம்
17. கோயிற்புராணம்.

